உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 ] சாதாரணஆண்டு ஆவணித்திங்கள் 10—9—70 [ இதழ் 1

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச்சொந்தமான
திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தானம்,
மகாகும்பாபிஷேக விழாவில்,



துறைசை, தருமை ஆதீனங்களின் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானங்கள்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஆருறு தத்துவமும்
ஆணவமும் நீங்கிஉயிர்
பேருக ஆனந்தம்
பெற்றலும்—வேருகப்
பார்த்திருப்ப தன்றியே
பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ
நிலத்து. (91)

---


ஆசிரியர் :

வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் ;

மகாவித்துவான்
சி அருணைவடிவேல் முதலியார்


---

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"


தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 || 10-9-70 || இதழ் 10


## உட்பொருள்





சத்தியாய்ச் சிவமாம் தனிமுழு முதல்அருள்
சித்தி விநாயகன் திருவடி போற்றி.



திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்கு வருகை புரிந்த
மைசூர் மகாராசா மாண்புமிகு ஜெயசாமராஜ வாடியார் அவர்களுக்கு
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
பொன்னாடை போர்த்து, மகர கண்டிகை அளித்தருளல்

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 29 | சாதாரண – ஆவணி - 10–9–70 | இதழ் 10

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியிஞய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பத நியமமே, – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## முதற் பெருநாள்

உலகில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளில் பலர்க்குச் செய்யப்படும் சிறப்புக்களில் முன்னுரிமை பெறுபவர் மூத்தோரும், உயர்ந்தோருமாவர். ஆயினும், இனிப்பு வழங்கல், சிற்றுண்டி வழங்கல் முதலிய நிகழ்ச்சிகளில் முன்னுரிமை பெறுபவர்கள் குழந்தைகளே. இந்நிலை நம் சைவ சமயக் கடவுள் வழிபாட்டில் அமைந்திருத்தல் அறிந்து மகிழத்தக்கது

சைவ சமயத்தின் முதற் கொள்கை, 'சிவபெருமானே முழுமுதற் கடவுள்; ஏனைய தேவர் பலரும் அப்பெருமானது அருளாணையின்வழி ஒவ்வொரு செயற்குத் தலைமை பூண்டு

அவற்றை இயற்றிநிற்கும் அதிகார மூர்த்திகள்' என்பது. அதனுல், எத்தகைய சிறப்பும் சிவபெருமானுக்குச் செய்த பின்பே, பிற கடவுளருக்குச் செய்தல் சைவ சமய மரபு.

தக்கன் வரலாறு இம்மரபினை வலியுறுத்த எழுந்ததே யாகும். அஃதாவது, 'தக்கன் தான் செய்த யாகத்தில் யார் என்ன சொல்லியும் கேளாமல் சிவபெருமானுக்குத் தர வேண்டிய முதல் அவிசினைத் திருமாலுக்குக் கொடுக்க முற்பட்டமையால், அவனது வேள்வியும் அழிந்து, அதில் பங்குபெற வந்திருந்த தேவர்களும் நிலைகெட்டொழிய, அவனும் தன் தலையை யிழந்து, ஆட்டுத்தலை பெற்றுன்' என்பது.

இங்ஙனமாயினும் சைவ சமயத்தில், வழிபாட்டில் முதற் பூசை பெறுவர் யானைமுகக் கடவுளாகிய விநாயகரே. இது சிவபெருமானே அவருக்கு அளித்த உரிமை. இவ்வரலாற்றைக் கந்த புராணம் விரித்துக் கூறும். அதன் சுருக்கம் பின் வருவது.

'வசிட்ட முனிவரது மரபில் தோன்றிய 'மாகதர்' என்னும் முனிவர் தவம் செய்திருக்கும்பொழுது தீய எண்ணங் கொண்டு அவர்பால் வந்த 'விபுதை' என்னும் அசுர கன்னிகையின் மயக்கில் அவர் அகப்பட்ட காரணத்தால் அவ்விருவரும் களிறும் பிடியுமாகிக்கூட, அவ்வசுர கன்னிகையிடம் யானைமுகத்துடன் 'கயமுகன்' என்னும் அசுரன் தோன்றிப் பன்னெடுநாள் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து, யாதோர் ஆயுதத்தாலும் அழியா வரமும், எவ்வாறேனும் அழிவு நேரின் மீளப் பிறவா வரமும் பெற்று, 'மதங்கமாபுரம்' என்ெருரு நகரத்தைப் பரத கண்டத்தின் தென்பகுதியில் உண்டாக்கி, 'விசித்திர காந்தி' என்னும் அசுர மகளை மணந்து வாழ்ந்தான். அங்ஙனம் வாழும் நாளில் அவன் இந்திரனை உள்ளிட்ட தேவர் பலரையும் அடக்கி, அவர்தம் செல்வங்களைக் கவர்ந்து, அவர்கள் தம் பெண்டிருடன் வந்து ஏவல் செய்ய வீற்றிருந்தான். அதுகாலை அவன் தேவர்களுக்கு இட்ட முதற் கட்டளை இது:

வைக லும்இவன் வந்துழி நுங்கள்தம்
மெய்கொள் சென்னியில் மும்முறை தாக்கியே
கைகள் காதுறக் கால்கொடு தாழ்ந்தெழீஇச்
செய்க நம்பணி தேவர்கள் நீர்என்றுன்.

அஃதாவது :- 'நீங்கள் நாள்தோறும் நம்முன் வந்துநின்று தலையில் மும்முறை குட்டிக்கொண்டு, இருகைகளாலும் இரு காதுகளை மாறிப் பிடித்துத் தோப்புக்கரணம் இடவேண்டும்' என்பது. தேவர்கள் இவ்வாறே செய்துவரலாயினர்.

கயமுகாசுரன் கொடுமைக்கு ஆற்ருத இந்திரன் தனது இன்னலைப் பிரமன், திருமால் இருவர்க்கும் தெரிவிக்க, அனைவருமாகத் திருக்கயிலை சென்று சிவபெருமானை வணங்கி முறையிட்டனர். சிவபெருமான். 'யானைமுகத்து அசுரனை அழிக்க நாம் ஒரு யானைமுகப் பிள்ளையைத் தருகின்ருேம்; போமின்' என்று சொல்லிவிடுத்தார். பின்பு அவர் ஒருநாள் உமாதேவியுடன் கயிலைப் பூஞ்சோலையில் சென்று விளையாட்டாக உலாவி வரும்பொழுது, உமாதேவி அங்குள்ள சித்திர மண்டபத்தில் உள்ள சித்திரங்களைப் பார்க்கத் தொடங்கினுள். அதன்கண் பிரணவ ஓவியம் சிவபெருமானுக்கு உரியதாக ஒன்றும், அம்மைக்கு உரியதாக ஒன்றும் எழுதப்பட்டிருந்தன. அவற்றை அம்பிகை நோக்கியபொழுது யானைவடிவில் அமைந்திருந்த அவ்வோவியங்கள் உயிர்பெற்றுக் களிறும், பிடியுமாய்க் கூடியபொழுது, அவற்றினின்றும் யானை முகமும். தும்பிக்கையுள்ளிட்ட ஐந்து கைகளும் உடையவராய்ச் சிவபெருமானைப் போலவே மூன்று கண்களும், பிறை சூடிய சிவந்த சடைமுடியும் கொண்டு மூத்த பிள்ளையார் தோன்றினுர். சிவம் சத்திகளது பிரணவங்கள் களிறும், பிடியுமானதைப் புராணங்கள் அவர்களே களிறும், பிடியுமாய்க் கலந்ததாகக் கூறும். விநாயகரது பெருமையைக் கச்சியப்ப சிவாசாரியர்,

"ஒருமையால் உணருவோர் உணர்வினுக் குணர்வதாம்
பெருமையான், எங்கணும் பிரிவரும் பெற்றியான்,
அருமையான், ஏவரும் அடிதொழுந் தன்மையான்,
இருமையாம் ஈசனே என்னநின் றருளுவான்"

"மருளறப் புகலும்நான் மறைகளில் திகழும்மெய்ப்
பொருள்எனப் படும்அவன் புவனம்உற் றவர்கள்தம்
இருளறுத் தவர்மனத் திடர்தவிர்த் தருளஓர்
அருளுருத் தனைஎடுத் தவதரித் துளனவன்"

என்று விளக்குகின்ருர். 'இவ்வரலாற்ருல் பிரணவ சொரூபமே விநாயகர்' என்பது புலனுகும்.

இங்ஙனம் தோன்றிய ஐங்கரக் கடவுள் தம் தாய் தந்தையரை வணங்கி நிற்கத் தந்தையாராகிய சிவபெருமான் அவருக்கு,

" என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதல்
முன்னரே உனதுதாள் முடியுறப் பணிவரேல்
அன்னர்தம் சிந்தைபோல் ஆக்குதி ; அலதுனை
உன்னலார் செய்கையை ஊறுசெய் திடுதிநீ "

என்று வரம் கொடுத்தார். அஃதாவது, 'எத்தகையோராயினும் முதற்கண் உன்னை வணங்கி ஒரு காரியத்தைத் தொடங்கினுல் அக்காரியத்தை இடையூறு நீக்கி முற்றுவிக்கவும், அவ்வாறு செய்யாதவர் தொடங்கும் காரியத்திற்கு இடையூற்றை உண்டாக்கவுமான ஆற்றலை நீ உடையையாகுக' என அருள்புரிந்தார். அதனுல் அவருக்கு விக்கினராசர் — இடையூற்றுக்குத் தலைவர்' என்ற பெயர் உண்டாயிற்று. அதன்பின் பல்வகைக் கணங்கட்கும் அதிபதியாகும் வரத்தையும் அருளியதால், ' கணபதி, விநாயகர் ' என்ற பெயர்களையும் பெற்ருர். கசமுகக் கடவுளுக்கு இவ்வாறு அருள்புரிந்த வடிவம் 'கசமுகாநுக்கிரகர்' என்ற மாகேசுரவடிவமாகப் போற்றப்பெறுகின்றது.

பின்பு விநாயகர் நந்திமுதலானேர் வணங்கிப் புடைசூழச் சிவபெருமானது திருக்கோயில் முதல்வாயிலிலே வீற்றிருப்பாராயினர். அப்பொழுது ஒருகால் இந்திரன் முதலிய தேவர்கள் வந்து முறையிட, விநாயகப் பெருமான் அவர்களோடே பூதவெள்ளங்களுடன் சென்று யாதோர் ஆயுதத்தாலும் அழியாத கயமுகாசுரன்மீது தமது இருதந்தங்களில் ஒன்ருகிய வலத் தந்தத்தை ஒடித்து ஏவி அவனது மார்பைப் பிளந்தார். அச் செந்நீர் ( இரத்தம் ) வெள்ளமாய் ஓடியகாடு, 'செங்காடு' எனப்பட்டு, இப்பொழுது 'செங்காட்டங்குடி' என வழங்குகின்றது. அழியா வரம் பெற்ற அசுரன் பின்பு ஆகு ( பெருச்சாளி ) உருவுகொண்டுவர, விநாயகர் நல்லறிவை வழங்கி அதனை ஊர்தியாகக்கொண்டார். தேவர்கள் துன்பம் நீங்கி இன்பம் பெற்றனர். கணேசர் திருச்செங்காட்டங்குடியில் சிவலிங்கம் நிறுவிப் பூசைசெய்தார். அத்திருக்கோயிலே, 'கணபதீச்சரம்' எனப்படுகின்றது.

இன்னல் நீங்கி இன்புற்ற தேவர்கள் தாங்கள் கயமுகாசுரன் முன் தலையில் குட்டிக்கொண்டு, தோப்புக்கரணம் இட்டதை விநாயகர்முன் செய்வதாக வேண்டிக்கொண்டு அவ்வாறே செய்ய, விநாயகர் மகிழ்ச்சியுற்றார். அதனால் விநாயகர் திருமுன் பலரும் இவ்வாறு செய்து வழிபடுதல் மரபாயிற்று. சிவபெருமான் கொடுத்த வரத்தின்படியே விநாயகர் அனைவரிடமும் முதற்பூசை பெற்று அவர்களது காரியங்களை இடையூறு நீக்கி முற்றுவித்துவருகின்றார். திரிபுரம் எரிக்கச்சென்ற காலத்தில் சிவபெருமானே தம்மை நினையாது சென்ற காரணத்தால் விநாயகர் அவரது தேர் அச்சு முரியும்படி செய்தார். அச்சு இற்ற இடம், 'அச்சிறு பாக்கம்' என வழங்குகின்றது.

'தம்மை வணங்குபவர்க்கு இடையூறு நீக்கிக் காப்பவர் விநாயகர்' என்பதைத் திருஞானசம்பந்தர், "தனதடி வழிபடும் அவர்இடர் கடிகணபதி" என்று அருளிச் செய்கின்றார்.

"கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுனை அவனுற்கொல் வித்தார் போலும்"

என்று விநாயகரது திருவவதார வரலாற்றுக் குறிப்பை நாவுக்கரசர் குறித்துள்ளார். திருவுங் கல்வியும் சீரும் தழைக்கச் செய்வதனால் தேவர்களும் விநாயகப் பெருமானை அன்போடு கைகூப்பி வணங்குவர் என்பதை,

"திருவாக்கும் ; செய்கருமம் கைகூட்டும் ; செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் ; — உருவாக்கும் ;
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம் கை"

என்றும் கபில தேவ நாயனார் இரட்டைமணி மாலைச் செய்யுள் கூறுகின்றது. "வாக்குண்டாம் ; நல்ல மனம் உண்டாம் மாமலராள் — நோக்குண்டாம் மேனி நுடங்காது" என்ற ஔவையார் பாட்டும் இதையே வற்புறுத்துகின்றது.

விநாயகர் சிற்றுண்டிகளிலும், பல வகைப் பழங்களிலும் விருப்பம் உடைய பிள்ளையார் என்பதையும் மேற்குறித்த இரட்டைமணி மாலை குறிப்பிடுகின்றது.

அடிபணிந்து செய்வாயே நெஞ்சமே அப்பம்
இடி அவலோடு எள்ளுண்டை கன்னல்—வடிசுவையில்
தாழ்வானை ஆழ்வானைத் தன்னடியார் உள்ளத்தில்
வாழ்வானை வாழ்த்தியே வாழ்.

வாழைக் கனிபல வின்கனி மாங்கனி தாம்சிறந்த
கூழைச் சுருள்குழை அப்பம்எள் ளுண்டை எல்லாம் துறுத்தும்
பேழைப் பெருவயிற் ரேடும் புகுந்தென் உளம்பிரியான்
வேழத் திருமுகத்துச் செக்கர் மேனி விநாயகனே.

இன்னும் விநாயகரது பெருமையை அந்நூல்,

" விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் — விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து "

என்று விளக்குகின்றது.

விநாயகரது திருவருளைப் பெற்றுத் தேவாரத் திருமுறைகளைக் கண்டெடுத்துத் தந்த நம்பியாண்டார் நம்பிகளும் தமது இரட்டைமணி மாலையில் விநாயகரது பெருமையை இனிது விளக்குகின்றார். விநாயகரது பெருமையை விரித்துரைக்கின்ற 'விநாயக புராணம்' என்ற ஒரு தனிப் புராணமே உள்ளது. எந்த ஒன்றிற்கும் முன் நிற்பவராகிய விநாயகருக்குரிய பெருநாளாகிய விநாயக சதுர்த்தியே நாம் ஆண்டுதோறும் கொண்டாடும் பெருநாட்களில் முதற் பெருநாளாய் இருத்தல் அறியத்தக்கது. அதனை அண்மையில் நன்கு கொண்டாடி விநாயகரது திருவருளைப் பெற்ற நாம், இனி வரும் பெருநாட்கள் பலவற்றையும் இடையூறின்றி இனிது கொண்டாடி, எல்லா நலங்களையும் பெறுவதுடன், எச்செயலையும் விநாயகப் பெருமானை வணங்கித் தொடங்கி இனிது முடித்துப் பயன் எய்துவோமாக.

---

உ

குருபாதம்

குருவருள்

# தோத்திரமும் சாத்திரமும்

## அடிகள் வேடங்கள்

'இறைவன் உருவம் அற்றவன், யாதொரு பெயரும் இல்லாதவன், அவன் ஒரு தொழிலையும் மேற்கொள்ள வேண்டுவதில்லை' என்பதெல்லாம உண்மைதான். ஆயினும், இவையெல்லாம் அவனுக்குத் தன்னளவில் உள்ள இயல்புகளே.

தன்னளவில் மேற்கூறிய பெருநிலையில் நிற்கின்ற இறைவனுக்கு 'அருள் அல்லது கருணை' என்பதொன்று இயல்பாக உள்ளது. அவ்வியல்பு அவனை மேற்குறித்த நிலையிலே இருந்துவிடச்செய்யாமல், சிறிது கீழிறங்கிவரச் செய்கின்றது. அஃதாவது, இறைவன் தான்மட்டும் தனியாய் இருந்துவிடவில்லை. 'ஆன்மாக்கள் அல்லது உயிர்கள்' என்று சொல்லப்படுகின்ற பொருள்கள் கோடானுகோடியாக அளவின்றி அவனது வியாபகத்திற்குள்ளே அடங்கிக் கிடக்கின்றன. அவ்வான்மாக்கட்குப் பகையாய் அவற்றிற்குப் பலவகைத் துன்பங்களைக் கொடுக்கின்ற 'பாசம்' எனப்படும் தீய சத்திகளும் உடன் உள்ளன. உயிர்கள் கல், மண் முதலியனபோல சடப்பொருள்கள் அல்ல; இறைவனைப்போல அறிவுடைய பொருள்களே. அதனால், அவைகட்கு இன்பத் துன்ப அனுபவங்கள் உண்டு.

இனி, ஆன்மாக்கள் அறிவுடையனவாயினும், இறைவனைப்போல ஒருகாலத்தே எல்லாவற்றையும் ஒருங்கு அறியும் தன்மையும், அறிபவற்றை, விடாது அறிந்தாங்கு அறிந்தே நிற்குந் தன்மையும், யாதொன்றனையும் தானே அறியுந் தன்மையும் உடையன அல்ல. ஒருகாலத்தில் ஒருபொருளையே அறிந்து, பின் அதனைவிட்டு மற்றொன்றையும், பின்பு அதனை விட்டு வேறொன்றையும் இவ்வாறு ஒவ்வொன்றாகவே அறியும்

தன்மையும், இவ்வாறு அறிவதனையும் இடைவிடாது அறிதல் என்பது இல்லாமல், விட்டு விட்டே அறியுந்தன்மையும், அவ் வாறும் தானே அறியாது இன்னொருபொருள் அறிவிக்கவே அறியுந்தன்மையும் உடையன. இவ்வாற்றால், இறைவன், ‘பேரறிவுடையவன், இயற்கை அறிவுடையவன், சூக்கும சித்து’ என்றெல்லாம் சொல்லப்படுகின்றான். உயிர்கள் அவ்வாறின்றி “சிற்றறிவுடையன, அறிவிக்க அறிவன, தூலசித்து” என்று சொல்லப்படுகின்றன. இதனால் இறைவன் இயல்பிலே, பகைப்பொருளாகிய பாசங்களால் பற்றப்படாது தூயவனாய் விளங்குகின்றான். உயிர்கள் இயல்பிலே அப் பாசங்களால் பற்றப்பட்டுத் தூய்மையற்றுக் கிடக்கின்றன. பாசத்தால் கட்டுண்டு கிடப்பதற்கு, பசு’ என்பது பெயர். ஆகவே ஆன்மாக்கள் அல்லது உயிர்கள் ‘பசுக்கள்’ என் னும் பெயரைப் பெற்றன.

ஆன்மாக்கள் இவ்வாறு பாசத்தில் கட்டுண்டு பசுத் தன் மையை எய்தித் தன்முன் துன்புறுகின்ற நிலையைக் காண் கின்ற இறைவனுக்கு, இயல்பில் உள்ள அருள் காரணமாக அவற்றை அப்பாசங்களினின்றும் விடுவித்துத் தன்னைப் போலச் செய்தல் வேண்டும் என்னும் இரக்கமான நல்லெண் ணம் உண்டாகாதிருக்குமோ! அந்த நல்லெண்ணத்தினால் தான் அவன் தனது மேல் நிலையினின்றும் சிறிது கீழிறங்கி வருகின்றான். இவ்வாறு வருதற்குரிய குணமும், செயலும் அவனுக்கு இல்லாதிருப்பின், அவன் எல்லாரினும் மேலானவ னாயும், மிகப் பெரியவனாயும் இருப்பதால் யாருக்கு, என்ன பயன் உண்டாகும்! அதனால் இறைவன் தன்பொருட்டு யாதோர் உருவும், பெயரும், தொழிலும் கொள்ளவேண்டிய தேவை இல்லாவிடினும், உயிர்களின்பொருட்டுப் பல உருவும், பெயரும், தொழிலும் கொண்டு நிற்கின்றான். உருவம் அற்ற அவனது தன்நிலை, ‘சொரூபம்’ என்றும், உருவம்கொள்ளும் பொதுநிலை ‘தடத்தம்’ என்றும் சொல்லப்படுகின்றன. எனவே, இறைவன் தனது சொரூப நிலையில் உருவு, பெயர், தொழில் ஒன்றும் இல்லாதவனாயினும், தடத்த நிலையில் எண்ணற்ற உருவும், பெயரும், தொழிலும் உடையவனாகின் றான் என்பதும், அவற்றுள் ஒன்றேனும் அவன்பொருட்டாகா மல், அனைத்தும் ஆன்மாக்கள்பொருட்டாகவே அமைகின்றன என்பதும் விளங்கும். இதைத் திருஞானசம்பந்தர்,

"நானாவித உருவாய் நமை ஆள்வான்"*

என்று விளக்குகின்றார்.

இவ்வாறு இறைவனது சொரூபம், தடத்தம் என்னும் இயல்புகளை உணர்பவர்கட்கு,

"ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றும்இல்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ"

என்றாற்போலும் திருவாக்குக்களின் உண்மைப் பொருள் விளங்குவதாகும். சொருப தடத்தத் தன்மைகளை உணர மாட்டாதவர்கட்கு, இதுபோலும் திருவாக்குக்கள் முன்னொடு பின் முரணுவனவாகத் தோன்றும். அதனால் அவர்கள் அவ்விரண்டனுள் ஏதாவது ஒன்றையே, 'உண்மை' எனப் பற்றிக்கொண்டு, மற்றதை விலக்கிவிட எண்ணுவர். அது நிற்க,

"நானாவித உருவாய் நமை ஆள்வான்"

என்றதனால், ஆன்மாக்கள் எண்ணற்றவையாய் இருத்தலால் அவற்றின் தன்மைகளும் எண்ணற்று இருத்தல்பற்றி அவை அனைத்தையும் ஒன்று அல்லது ஒருசில உருவு பெயர் தொழில்களைக்கொண்டு உய்வித்தல் கூடாமைபற்றி, இறைவன் எண்ணற்ற உருவு பெயர் தொழில்களைக் கொள்கின்றான் என்பது விளங்குகின்றது. 'ஒருவனே இங்ஙனம் பல்வேறு வகையான உருவங்களைக் கொள்கின்றான்; ஆயினும், அவற்றுள் ஒன்றேனும் அவனது தன்நிலையன்று; பொதுநிலையே' என்பதை

"ஒருவனே இராவணாதி பாவகம் உற்றாற்போல"

என விளக்குகின்றது சிவஞான சித்தி நூல். பாவகம் - வேடம். வேடம், தமிழில், 'கோலம்' எனப்படும். எனவே, இறைவன் ஆன்மாக்கள் பொருட்டுக் கொள்கின்ற உருவம் அனைத்தும் வேடங்களேயன்றி அவனது தன்நிலை யன்று என்பதாகின்றது.

---

* திருமுறை - 1. 9. 5.

இவ்வேடங்கள் 'நிலையுடையன' எனவும், 'நிலையில்லன' என்வும் இருவகைப்படும். இறைவன் சதாசிவமூர்த்தமும், மாகேசுவர மூர்த்தங்களுமாக என்றும் நின்று அருள் புரியும் வடிவங்கள் நிலையுடைய வேடங்கள். இவை, நாடகங்களில், 'இவன் இவன் இன்ன இன்ன வேடம் தாங்கி நடிப்பன்' என்றல் போல்வன. இவ்வாறின்றிப் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலியவற்றிற் சொல்லப்பட்ட வரலாறுகளில் இறைவன் அவ்வப்பொழுது கொண்டன போல்பவை நிலையிலா வேடங்களாம். இவற்றை "அரன் தரும் சீர்நிலை" † என்கின்றது சிவஞானசித்தி. நிலையுடைய வேடங்களையே 'இயற்கை வடிவம் அல்லது உண்மை வடிவம்' எனக் குறிப்பர்.

இறைவன் கொள்ளும் இயற்கை வடிவங்களாகிய நிலையான வேடங்கள் வெறும் வேடமாத்திரையாய் நில்லாது, எண்ணற்ற பல உண்மைகளை நமக்கு விளக்குவனவாம். அது பற்றியே திருமுறைகள் முழுதும் பெரும்பான்மையும் அவ் வேடத்தின் இயல்புகளையும், அவற்றிற் காணப்படும் செயல்களையுமே சிறப்பித்துப் பாடுகின்றன. பொதுவாக, 'இறைவனது வேடத்தின் சிறப்பே அளவிடற்கரியது' என்பதனையே ஒரு திருப்பதிகத்தில் திருஞானசம்பந்தர் எடுத்தோதியருளுகின்றார். அத்திருப்பதிகம், திருநீற்றின் பெருமையை முழுதும் விளக்குகின்ற திருநீற்றுத் திருப்பதிகம்போல, இறைவனது திருவேடத்தின் பெருமையை முழுவதும் விளக்குகின்ற திருவேடத் திருப்பதிகமாகும். அது,

"மருந்துவேண் டில்இவை; மந்திரங் கள்இவை;
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்இவை"

என்று தொடங்குகின்ற, திருந்துதேவன்குடித் திருப்பதிகம். * திருநீற்றுத் திருப்பதிகம், "மந்திரமாவது" என்று தொடங்குகிறது. இது "மருந்து" என்று தொடங்கி, மந்திரத்தை இரண்டாவதாகக் கூறுகின்றது.

---

† சூ. 12. 7.

* *திருமுறை – 3. 25.*

இத்திருப்பதிகத்துள் திருஞானசம்பந்தர் இறைவனது திருக்கோலத்தின் பெருமையைப் பலவாறு அருளிச் செய்வனவற்றில் மிகவும் அரியனவான சிலவற்றைக் குறிக்கின்றார். அவை,

"......................வினையை வீட்டு(வ்)வன,
ஓதி ஓர்க்கப் படாப் பொருளைஓர் விப்பன,
......................அடிகள் வேடங்களே."

"......................மாசுநீக் கு(வ்)வன,
வானை உள் கச்செலும் வழிகள்காட் டு(வ்)வன.
......................அடிகள் வேடங்களே"

"விண்ணுலா வும்நெறி, வீடுகாட் டும்நெறி,
மண்ணுலா வும்நெறி, மயக்கம்தீர்க் கும்நெறி,
......................அடிகள் வேடங்களே"

என்றாற்போல்வன. இவற்றால் இறைவனது திருக்கோலமே நமக்கு எல்லா ஞானத்தையும் தரும் என்பது விளங்கும். அதனால், அத்திருக்கோலங்களையே பெரிதும் எடுத்துப் பேசுகின்ற திருமுறைகள் ஞானக் கருவூலங்களாம் என்பது தானே பெறப்படுகின்றது.

இங்ஙனம் இறைவனது திருவுருவ நிலைகளையே திருமுறைகள் எங்கும் எடுத்துப் பேசினும் திருநாவுக்கரசர் அதற்கென்றே 'அடையாளத்திருத்தாண்டகம்[1]' என்ற ஒரு தனித் திருப்பதிகத்தை அருளிச்செய்துள்ளார். மற்றும் திருவாய்மூர்த் திருத்தாண்டகம்[2] திருவினாத் திருத்தாண்டகங்களிலும்[3] அவ்வடையாளங்களையே விரித்தோதினார். ஞானசம்பந்தரும் பாண்டியனுக்கு உபதேசமாகச் செய்த திருப்பாசுரத் திருப்பதிகத்துள், "அரிய காட்சியராய்" என்ற திருப்பாடலில், பிற அடையாளங்களையும கொள்ளுதற்கு எடுத்து மொழிதலாக, "தமது அங்கைசேர் எரியர்; ஏறுகந்து ஏறுவர், கண்டமும் கரியர், காடுறை வாழ்க்கையர்" என்று சிலவற்றைக் கூறினார். உண்மைப் பொருள்கள் பலவற்றை இவ்வாறு எளிய சில அடையாளங்களால் அறிவுறுத்துவதே பண்டைமுறை – பழஞ் சமயம். இதனை அறியாமையால், இத்திருவேடங்களைச்

சிலர் மறுக்க முற்படுகின்றனர் என்பதையும் ஞானசம்பந்தர் மேற்காட்டிய திருந்துதேவன்குடித் திருப்பதிகத்துள்,

"செருமரு தண்துவர்த் தேரமண் ஆதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்;
..............................................................
அருமருந் தாவன அடிகள் வேடங்களே"

என்று குறித்தருளினர். இத்தகைய இறைவனது திருக்கோலங்களை ஏற்றுக்கொள்ளாதவர்கள் இக்காலத்திலும் பலர் உளர் என்பது சொல்லத் தேவை இல்லை. உற்றுநோக்குவார்க்கு இறைவனது திருவேடங்களே சாத்திரமாகும். அதனல் அத்திருவேடங்களை விரித்தோதுகின்ற திருமுறைகளாகிய தோத்திரங்களின் உண்மையை உணர்தற்குச் சாத்திரங்களே துணைசெய்வன. ஆகவே சாத்திரங்களின் வழித் தோத்திரங்களின் உட்பொருளை உணர்ந்து பயன் பெறல் செய்யத்தக்கதாம்.

---

[1] திருமுறை - 6. 4. [2] திருமுறை - 77. 3. [3] திருமுறை - 97. 7.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Amirthakateswaraswamy Devasthanam, Tirucadayur.

I express my grateful thanks to the managements of the Dharmapuram Adhinam for en bling me to have the holy Dharsan of Goddess Abhirami and other Gods. The religious spirit and ardour are entrancing in such a Godly atmosphere.

(Sd.) K. N. Mudaliar,
12—8—70. Judge, High Court Madras.

# சிவாகம ஸார ஸர்வஸ்வம்

சிவாகம வித்துவான், சிவாகமரத்னாகரம்,
**சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்**

( மலர் 29. இதழ் 8. பக்கம் 429 இன் தொடர்ச்சி )

ஆசாரியன் பஞ்சசுத்தி செய்துகொள்ளுவதற்கு ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு, பஞ்சசுத்திகளைச் செய்யவேண்டும்.

आसनं दर्भदारुं च सारङ्गं चर्म चैव च ।
व्याघ्र चर्म सरोमाऽपि रत्नकम्बळमासनम् ॥

தர்ப்பாஸனம், பலகை, மான்தோல், புலித்தோல், ரத்ன கம்பளம் முதலிய ஏதாவதொரு ஆஸனத்தில் ருசிராஸனத்தில் உட்காரவேண்டும். — சூக்ஷ்மாகமம்.

ருசிராஸனம் என்பது தொடை, முழங்கால் இவைகளை சம்புடமாக மடக்கிக்கொண்டு நாஸாக்ரத்தை பார்த்துக் கொண்டு இருக்கும் நிலை, உடலைக் கூனிக்கொள்ளாமல் நிமிர்ந்து இருக்கவேண்டும்.

आत्मशुद्धिस्तु पूर्वास्यात् स्थान शुद्धिर्द्वितीयका ।
त्रितीया द्रव्य शुद्धिस्याच्चतुर्थं मन्त्रशोधनम् ॥
पञ्चमं लिङ्गशुद्धिस्यादित्येते पञ्चशुद्धयः ।

ஆன்மசுத்தி, ஸ்தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, லிங்க சுத்தி அல்லது பிம்பசுத்தி என்று ஐந்து சுத்திகள் செய்ய வேண்டும். — சுப்ரபேதம்.

தீக்ஷையினால், தேஹ ஜீவாதிகள் சுத்திபெற்றிருந்தாலும், மாதாபித்ரு மலோத்பூதமான இந்த தேஹத்தில் தடாகத்தில் உள்ள பாசிபோல் மீண்டும் மீண்டும் ப்ராரப்த்தத்தி

ஞல் அசுசி ஏற்படுமாதலால், அன்றன்று பூஜாரம்பத்தில் தேஹசுத்திகளைச் செய்துகொள்ளவேண்டும்.

— சித்தாந்தசேகரம்.

பூதசுத்தி என்பது, தேஹசுத்தி, ஜீவசுத்தி என இருவித மாகும். தேஹசுத்தியும் ஸ்தூல தேஹசுத்தி என்றும் சூக்ஷ்ம தேஹசுத்தி என்றும் இரண்டு வகைப்படும்.

பூஜகருடை தேஹத்தை சிவதேஹமாக ஆக்குதல் தேஹ சுத்தி, பூஜகருடைய ஜீவனை சிவமாக ஆக்குதல் ஜீவசுத்தி எனப்படும்.

இந்த ஆன்மசுத்தி, கரநியாஸ அங்கநியாஸ ரூபமான ஸகளீகரணத்துள்ளடக்கம். அதாவது கரநியாஸம் செய்து கொண்டு ப்ராணயாமத்தின் அனுபவத்தினுல் தேஹசுத்தி ஜீவசுத்தியைச் செய்துகொண்டு முடிவில் அங்கநியாஸம் செய்துமுடிக்கவேண்டும்.

தனது சரீரத்திலிருக்கும் இடை பிங்கலை சுழுமுனை என்ற நாடிகளை உணர்ந்து சுழும்ஞநாடியின் நடுவில் ஹ்ருதயகமலத் தில் வீற்றிருக்கும் சைதன்யத்தை ஜ்வலிக்கின்ற ஹுங்கார மெனும் ஒடத்தில் வைத்து அதில் ரேசகமார்க்கமாக த்வாதசாந் தத்திலிருக்கும் சிவனேடு சேர்த்துவிட்டு, பிரதிவி முதலான பூதங்களை கந்த முதலான தன்மாத்திரைகளில் அடக்கி எல்லாவற்றையும் பிந்துவில் அடக்கிவைத்து விட்டு ஸ்தூல தேஹத்தை சுத்திசெய்யவேண்டும் ப்ரதி லோம முறையாக தன்தனது கரணங்களை பிந்துவரை அடக்கி வைத்தல் சூக்ஷ்மதேஹசுத்தியாகும்.

பிருதிவி முதல் ஆகாயமீருகிய பஞ்சபூதங்களையும் அவ்வப் பூதங்களின் நிறம், குறி, தெய்வம், வடிவங்களோடு தியா னித்து அவ்வப்பூதங்களுக்குரிய கலா மந்திரங்களை அவ்வக் கலா பீஜங்களோடு முறைப்படி சேர உச்சரித்து அப்பூதங்களை விதிப்படி சுத்திசெய்வது ஸ்தூலதேஹசுத்தி, பிறகு வலது கால் கட்டை விரலிலிருந்து எழுந்த அக்னியால் சரீரத்தி லுள்ள பூததோஷங்களைக் கொளுத்தி தஹனம் செய்துவிட்டு மறுபடி ஹ்ருதய கமலத்தில் த்வாதசாந்தத்திலிருந்தும் பீஜரூப மாயும் சிவவடிவாயுமுள்ள ஆன்மாவை இறக்கிவைத்து,

வௌஷடந்தமான சத்தி மந்திரத்தினுல் கலக்கப்பட்ட ப்ரம்ம ரந்திரத்திலிருக்கும் அமிருதவாவியினின்றும், அமிருத ப்ரவாகத்தை எல்லா நாடிகளின் வழியாகவும் தனது பாஹ்யம் ஆப்யந்தரம் எல்லாப் பகுதிகளேயும் ஆப்லாவனம் செய்வது ஸ்தூலதேஹ ஸூக்ஷ்மதேஹ சுத்தியுடன் ஜீவசுத்தியுமாம்.

— ஸகலாகமசாரம்"

அஸ்திர மந்திரங்களினுல் தாளத்ரயஞ்செய்து அங்கு நிற்கும் இடையூறு அகற்றி, அஸ்திர மந்திரத்தினுல் அக்னி வர்ணமாகிய மதிலேயும் கவசமந்திரத்தினுல் அகழையுஞ் செய்து, சத்திமந்திரத்தால் மேலுங்கீழும் சத்திகள் நிறைவாகப் பாவித்துச் சிவலிங்கத்துக்குமுன் மண்டலமிட்டு பூமி தேவியைத் தியானித்தல், ஸ்தானசுத்தியாகும்.

திரவியசுத்தி என்பது முன்கூறியபடி அர்க்கியம் வைத்து அதனுல் எல்லாத் திரவியங்களேயும் புரோக்ஷித்தல் ஆகும்.

மந்திரசுத்தி :- தந்தம், தாலு, ஒஷ்டம் என்ற இடங்களில் மந்திரங்கள் பட்டு வருதலால், அங்குள்ள மாயிகை என்ற அசுசி பட்டு அதனுல் அந்த அந்த மந்திரங்கள் அதற்குரிய ஈச்வரனுல் கொடுக்கப்பட்ட சக்திக்குறைவு ஏற்பட்டு அந்தந்த மந்திரங்களாலுண்டாகும் பலன் குன்ருமலிருக்கவே செய்யப்படும் சுத்தி மந்திரசுத்தி. ஹ்ருஸ்வம் தீர்க்கம் ப்லுதம் என்ற மூன்றுவிதமாக ஓம்காரத்தை முதலாக நமோந்தமாக ஸம்ஹிதா மந்திரத்தை ப்ராஸாத மந்திரத்துடன் கூடிய மூல மந்திரத்தை உச்சரித்தல். இதில் ஹ்ருஸ்வமாக பிரமமந்திரத்தையும் தீர்க்கமாக அங்கமந்திரத்தையும் ப்லுதமாக ப்ராசாத மூலமந்திரத்தை மும்முறை கூறவேண்டும்.

(ஹ்ருஸ்வம் என்பது பிந்து வரையில் உச்சாரணம், தீர்க்கம் பிரும்மரந்த்ரம் வரையில் உச்சாரணம், ப்லுதம் த்வாத சாந்தம் வரையில் உச்சாரணம்.)

வலது உள்ளங்கையில் சந்தனத்தினுல் இடது பெருவிரலால் சந்தனம் பூசி அதில் முக்கோணம் வரைந்து அதன் நடுவில் ப்ரணவம் எழுதி இடது கையால் நீரீக்ஷண முதலிய ஸம்ஸ்காரம் செய்து ஜ்யோதிர் வடிவமான அர்க்கியம் கொடுத்து அஞ்சலி கூப்டி, தன்னே சிவஸ்வரூபமாக நினைத்து

தனது உடலில் அந்த சந்தனத்தைப் பூசிக்கொள்ளவேண்டும். இது சிவஹஸ்தபாவனே. இதனுல் இந்த ஹஸ்தம் சிவ பூஜார்ஹமாக ஆகிறது; தானும் சிவஸ்வரூபனுக ஆகிருன்.

" शिवोभूत्वा शिवं यजेत् "

என்றபடி சிவபூஜைக்குத் தகுதி உள்ளவனுகிருன்.

லிங்கசுத்தி என்பது ஆன்மார்த்தத்தில் பார்த்திவ லிங்கம் பூஜைசெய்யுமிடத்தில் தனியாகச் செய்யப்படும். பரார்த்தத்தில் மூலலிங்க அபிஷேகத்துடன் சேர்ந்துவிடும்.

ஆன்மார்த்த விஷயத்தில் பர்யுஷிதமான புஷ்பத்தை இலிங்கமஸ்தகத்தினின்றும் பெருவிரல், தர்ஜனி விரல்களால் எடுத்து அதேசமயத்தில் முன்பே சிறுவிரல் மோதிரவிரலின் இடையில் வைத்திருக்கும் புஷ்பத்தை சிரஸில் வைத்துவிட வேண்டும். பிறகு அஸ்திரஜலத்திலும் சாமான்யார்க்கி வத்தினுலும் அபிஷேகம் செய்யவேண்டும். இது இலிங்கசுத்தி யாகும்.

— காமிகாகமம்.

பஞ்சகவ்யஸ்தாபனம் பஞ்சாமிருதஸ்தாபனம் முதலியன செய்துகொண்டு, அக்னிகாரியம், ஹோமம் செய்து சுவாமிக்கு போகாங்கம் பூஜைசெய்து அபிஷேகம் நிவேதனம் முதலியன செய்து கௌரீபூஜையும் பிறகு சண்டேசபூஜையும் செய்ய வேண்டும்.

போகாங்கபூஜை :

சக்தியாதி சத்திபூஜையான பஞ்சாஸன பூஜைசெய்து நியாசங்களால் நியசித்து, வித்யாதேஹம் கல்பித்து நேத்ர நியாஸம் செய்து மூலமந்திரம் குருவின் உபதேச முறைப்படி ஆவாஹனம் முதலியன செய்து ப்ரதமாவரணம் முதலிய ஆவரண பூஜை செய்யவேண்டும்.

( தொடரும் )

# " கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியன் "

**வித்துவான். திருமதி. ப. நீலா**

( மலர் 29, இதழ் 9, பக்கம் 490 இன் தொடர்ச்சி )

## 33. அட்டமாசித்தி உபதேசித்தது

கொத்திலங்கு கொன்றைவேணி கூடலாதிபன் மதுரை மறுகணைந்து வளையல்விற்ற விநோதங்கண்ட நாம் கந்தருவப் பெண்களான கார்த்திகைப்பெண்கள் வேண்ட அட்டமாசித்தி உபதேசித்த அழகினைக் காண்போம்.

சிவகதைக் கரும்பு :-

தென்னவன் குலபூடணன் தன்னாணையைத் திசையெலாம் செலுத்தும்நாளில் ஊழிதோறூழி ஓங்கும் திருக்கயிலை மலையிலே கல்லால மரத்தடியில் கண்ணுதல் வீற்றிருக்கிறான். வெள்ளிவெற்பின் அருகிருக்கும் மரகதக்கொடிபோல அன்னை உமாதேவி அன்போடு வெற்றிலைச்சுருளைக் கொடுத்துக் கொண்டிருக்க ஐயன் போகமூர்த்தியாய் விளங்குகின்றான். பிருங்கிமுனிவர், நந்தியெம்பெருமான், சனகாதிமுனிவர் நால்வர் ஆகியோர் பக்கமமர்ந்து கேட்கப் பெருமான் சிவகதையென்ற கரும்பைத் தந்துகொண்டிருக்கிறார்.

பௌவத்தில் சூர்தடிந்த பாலகனும் முருகனுக்குப் பாலூட்டிய அன்னையர் அறுவரும் மெய்ம்முழுதும் நீறணிந்து உருத்திராக்கம் முதலிய தவசிவச் சின்னங்களை அணிந்து கொண்டு திருக்கயிலைக்கு வந்தனர். வேதமென்ற சிலம் பொலிக்கும் பாதகமலங்களை வணங்கி எந்தையே எங்களுக்கு அட்டமாசித்திகளை உபதேசித்தருளவேண்டும் என்றனர்.

**பாவையர் பாறையாயினர் :-**

அருகிருக்கும் பொற்புடை வெற்பரையன் பாவையைக் காட்டி இவளே அகிலமெங்கும் பராசக்தி, மகேசையாய்; அணிமா முதலிய சித்திகளெட்டும் சேடிகளாய் ஏவல் செய்ய வீற்றிருப்பவள். இவளை நீர் வணங்கி அவைகளைப் பெறுவீர் என்று கனிவோடு சித்திகளை அறிவித்துப் போகவிட்டான். முன்னை விதிவசத்தால் அவர்கள் அதனை மறந்ததோடு அன்னையையும் மறந்தனர்.

மதிப்பிளவு வேய்ந்த மகாதேவன் அவர்கள் செய்த தவற்றிற்குத் தண்டனையாகப் பட்டமங்கை எனுந்தலத்தில் பாறைகளாமாறு சபித்தான். கண்கள் கண்ணீரைக் கொட்ட அவர்கள் இச்சாபம் நீங்குவது எப்பொழுது எனப்பணிந்தனர். இறைவனே நாம் மதுரைக்குவந்து உங்கள் உருவை மீளவுந் தருவதற்கு இன்னும் ஓராயிரம் ஆண்டுகளாகும் என்றான். கொடியனார்கள் அறுவரும் பட்டமங்கையில் பாறைகளாய்க் கிடந்தனர். குயவன் வனைந்த புதிய பாண்டங்கள் போன்ற ஆலம்பழங்கள் மேலே விழுந்து தம் தோற்றத்தை மறைக்கப் பாறைகள் கிடந்தன.

"கதிர்கலம்பெய் காட்சிபோல் உதிர்பழத்தி னுடலெலாம்
புதைபடக் கிடந்தனர் மதரரித் தடங்கணார்."

**பூத்த இளங்கொம்பினங்கள் :-**

பின்பொருநாள் பேதமையகற்றிடும் நாதனின் அருள் ததும்பு கண்பார்வையால் அப்பாறைகள் அம்புயம், நெய்தல், காந்தள், முல்லை, குமுதம் என்ற பூக்கள் பூக்கப்பெற்று எழுந்துநின்றன. வேதகத் திரும்பு பொன்னானாற்போலே நீக்கமற்ற இருள்மலம் சிவன்பார்வைபடவே நீங்கியது. எழுந்து இறைவன் திருவடியில் தவக்கொழுந்தனார் விழுந்து இறைஞ்சினார்கள். வேலனுக்குப் பாலூட்டிய வேல்விழியார்தம் சிரசில் தம்கமலமனைய கைவைத்து அட்டமாசித்திகளை ஐயன் உபதேசித்தான். அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்த்தி' பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்ற எட்டுச் சித்திகளே அட்டமாசித்திகளாகும்.

அணிமா: மிகச் சிறிய உயிர்தோறும் பரமாணுவாகச் சென்றுறையும் சித்தியாகும்.

மகிமா: மண் முதலாகச் சிவதத்துவமீருக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நீங்காது நிறைந்திருப்பது இது.

கரிமா: இலேசான பரமாணுவைப்போலிருக்கும் யோகி மாமேருபோல் கனமொடு இருத்தல்.

லகிமா: மேருமலேபோலே பாரமாகத் தோன்றும் யோகி கனமற்றிருத்தல்.

பிராப்த்தி: பாதலத்திலிருந்து பிரம்மலோகத்திற்கும் அங்கிருந்து பாதலத்திற்கும் வருதல்.

பிராகாமியம்: மற்றைய உடல்களில் புகுதல், வானில் இயங்கல், விரும்பிய இன்பங்களே இருந்த இடத்தில் வரவழைத்தல்.

ஈசத்துவம்: சீர்மிகப் படைத்த சிவனேப்போல ஆக்கல், அழித்தல், காத்தல் செய்தலும்; ஒன்பது கோள்களும் ஏவல் கேட்குமாறு வீற்றிருத்தலும்.

வசித்துவம்: அவுணர், பறவை, விலங்கு, பூதம் மனிதர் இவர்களோடு திக்குப்பாலகர்களேயும் தனவசமாக்கிக் கொள்வதாகும் இது.

எம்மை யுணர்ந்த யோகியர் இவற்றை விரும்பாராளுலும் உலகோர்க்குத் தத்தம் ஆற்றல் காட்ட இவைகளே அவர்கள் செய்வார்கள் என்று கார்த்திகைப் பெண்களுக்கு ஈசன் எடுத்துரைத்தான். உபதேசம் பெற்ற காரிகையர் மனம் மிகக் களித்து மலேமகளே நாள்தோறும் தியானித்து இறைவனதிடமான திருக்கயிலேயைச் சேர்ந்தார்கள்.

(வளரும்)




திருக்குறள்வேள்,

**திரு. ஜி. வரதராஜப் பிள்ளை B, A,**

( மலர் 29, இதழ் 9, பக்கம் 493 இன் தொடர்ச்சி )

107 பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்
அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை
நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்.
வயனம் பெறுவீர்அவ் வானவ ராலே.

குறிப்புரை :- பயன் - உண்மைப்பயன். உண்மைப்பயனை உணர்ந்து சிந்தித்தால் பிரமனும் திருமாலும் நமக்கு வேறல்ல என்க. நயனம் - கண். தமர் - சுற்றத்தார். வயனம் - வயணம், வகை. வானவர் - அயன் மால். நந்தி தமராகிய அயன் மால் ஆகிய இருவராலும் மேன்மை பெறலாம் என்க.

108 ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநி
ஞாலத்து நம்மடி நல்கிடென் றனே.

குறிப்புரை :- ஓலக்கம் - திருச்சபை. உலப்பிலி தேவர் - சாவற்ற தேவர். அமரர் சூழ்ந்த ஓலக்கம் என்க. பாலொத்த மேனி - வெண்மேனி. திருமேனியைத் தொழுதால் பிரமற்கும் மாலுக்கும் ஒப்பாகலாம் என்க. அடி நல்குதல் - அருளைப் பரப்புதல்.

பூவுலகில் போதகாசிரியனாக இருந்து திருவடி ஞானத்தைக் கொடுத்தருள்க என்று கூறியருளினன் என்பதாம்.

109 வானவர் என்றும் மனிதர்இவர் என்றுந்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே.

குறிப்புரை :- இவர் வானவர் என்றும், இவர் மனிதர் என்றும் சிறப்பித்துச் சொல்லப்பெறுவது சிவன் அருளாலே யாம் என்க. ஓரும் - சிந்திக்கும். இவ்வாறு சிந்திப்பது அன்றி வேறில்லை என்க. ஊனமர்ந்தோர் - ஊனில் உயிர்ப்பாய் இருப்போர்.

இவரை உணர்வதே கடன் என்பதாம்.

110 சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே.

குறிப்புரை :- சோதித்த பேரொளி - சோதனையில் துரிசற விளங்கும் சோதி. ஆதிக்கண் - சிவனிடத்தில். பேரொளி யானது மூன்றைந்தெனநின்ற ஆதியினிடத்து ஆவது அறி கிலர் என முடிக்க.

ஆதர் - மூடர். நீதிக்கண் - உலகியலில். பேதித்து - வேறுபடுத்தி; உலகியலில் மூவரையும் வேறுபடுத்திப் பேசு கின்றனர் என்க.

111 பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப் புறமாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே.

குறிப்புரை :- பரம் - முன். வரத்து - படைப்பு. ஒன்றாய வனே படைத்தலையும் காத்தலையும் செய்யும் அயனாயும் மாயவனா யும் உள்ளான் என்க. தரம் - முறை. கரத்தல் - மறைத்தல்.

112 தானொரு கூறு சதாசிவன் எம்மிறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே.

குறிப்புரை :- வான் - ஆகாயம். எம்மிறையாகிய சதா சிவன் ஆகாயக்கூற்றில் விளங்குபவன் என்க. உயிர்க்கின்ற கோன் - பிராணனாகவும் உள்ள தலைவன். சலம் - அசைவு. ஸ்பந்தரூபமாகவும் விளங்குபவன் என்க.

இறைவனே உயிர்க்கு உபகாரியாகவுள்ளான் என்பதாம்.

# முதல் தந்திரம்

## 1. உபதேசம்

113 விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே.

குறிப்புரை :- விண் - பரமாகாயம். வினைக்கீடாய் - ஆன்மாக்களின் வினைக்கேற்ப. மெய்கொண்டு - திருமேனிகொண்டு, தண்ணின்றதாள் - குளிர்ந்த திருவடி. தலைக்காவல் - அநாதியிலே அமைந்த காவல். ஆனந்தககண் - ஞானக்கண். களிம்பு - மலம்.

ஆன்மாக்களின் வினைக்கீடாக அருளும் வண்ணம் ஞானத்தைக் கொடுத்து மலத்தைப் போக்கினன் என்பதாம்.

114 களிம்பறுத் தான்எங்கள் கோனந்தி நந்தி
களிம்பறுத் தானருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே.

குறிப்புரை :- அருட்கண் - ஜீவர்களுக்குரிய நெற்றிக்கண். நெற்றிக்கண்ணைத் திறத்தலாவது, கண்டத்தை அகண்டமாகச் செய்தலாம் என்க. கதிரொளி - ஞானசூரியன். பளிங்கு - பளிங்குபோன்ற ஜீவன். பவளம் - பவளம்போன்ற செந்நிறம் (சிவத்துவம்).

சாதகர்க்கு நவமான செஞ்சுடர் நல்குவான் என்பதாம்.

115 பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே

குறிப்புரை :- பதி - சதாசிவன். பசு - ஜீவன். பாசம் - தளை. அநாதி - பழமையானது. முப்பொருளும் பழமையானது.

என்க. பசு பாசம் - பசுத்தன்மையும் பந்தமும். பதியின் முன் பசுத்தன்மையும் பந்தமும் நில்லா என்க.

முப்பொருள் இயல்பு கூறியவாறு.

116 வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னுந்
தோயம தாய்எழுஞ் சூரிய னாமே.

குறிப்புரை :- வேயின் எழுங்கனல் - மூங்கில் உராய்வதனால் உண்டாகும் தீ மூங்கில் தீபோன்று கோன்நந்தி அகத்தே தோன்றுவான் என்க. தயா என்னும் தோயம் - கருணையாகிய கடல்.

கருணையாகிய கடலானமையால் மலமாகிய அழுக்குகளைப் போக்குவான் என்பதாம்.

(தொடரும்)

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

I had the good fortune of visiting this great shrine this evening. It has been an inspiring and ennobling experience. No wonder that in this sacred atmosphere hundreds and thousands of devotees are cured of their ailments by the Grace of the Lord. The premises of the Temple are kept spotlessly clean and tidy which, again constitutes in no small measure, to the curative aspect of the shrine.

My respectful Pranams to the authorities of the temple for what I consider their remarkable management.

(Sd) P. V. Narasimhan,

16-8—70. Minister for Education, Andhra Pradesh,

Hydrabad.

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்
# காசியாத்திரை அனுபவங்கள்

திரு. அ. கல்யாணசுந்தர தேசிகர்

( மலர் 29, இதழ் 9, பக்கம் 510 இன் தொடர்ச்சி )

## ஸ்ரீ காசி

விஸ்வேசம் மாதவம் துண்டிம்
தண்டபாணிஞ்ச பைரவம்
வந்தே காசீம் குஹாம் கங்காம்
பவாநீம் மணிகர்ணிகாம்

ரக்த ஜ்வால ஜடாதரம் ஸுவிமலம்
ரக்தாங்க தேஜோமயம்
த்ருத்வாசூல கபால டமருகந்
லோகஸ்ய ரட்சாகரம்
நிர்வாணம் சுனவாகனம்
த்ரிநயனம் ஸானந்த கோலாகலம்
வந்தே பூத பிசாச நாத வடுகம்
க்ஷேத்ரஸ்ய பாலம் சிவம்

ஸ்ரீ காசி வேதகாலத்துக்கு முன்பிருந்தே புகழ்பெற்று விளங்கிவருகிறது என்பது பல வேதவாக்கியங்களாலும் உபநிஷத் விளக்கங்களாலும் அறியலாகும். வேத உபநிடத ஆசிரியர்களாக உள்ள பல முனிபுங்கவர்களும் ஸ்ரீ காசியில் வந்து தங்கி அக்காலத்திலேயே தவமியற்றி இருக்கிறார்கள்.

காசி நகரம் உத்தரப்பிரதேசத்தில் உள்ளது. ஏழு லட்சம் மக்களைக் கொண்டது. ஆலயங்களும் உண்மை அடியார்களும் மிகுதியாக உடையது. துளசிதாசர், சூர்தாசர், கபீர்தாசர், ரமானந்தர், தருமையாதீனம் தமிழ்க் குமரகுருபர முனிவர் முதலிய பல அருளாளர்கள் ஆஸ்திகம் தழைக்க

வாழ்ந்த பெருமை உடையது. கயையில் ஞானம் கைவரப் பெற்ற புத்தர் இங்கு வந்துதான் (சாரநாதத்தில் தங்கி) பௌத்தக் கொள்கையை உலகறியச் செய்தார். இக்காலத் திலும் தொழில்வளத்திலும், டீசல் எஞ்சின் தொழிற்சாலை, சைக்கிள் தொழிற்சாலைகளைப் பெற்றுப்பெருகி வருவது. காசி வித்யாபீடம் எனும் (வடமொழி) பல்கலைக்கழகமும், இந்து சர்வகலாசாலை எனும் பல்கலைக்கழகமும், உயர்ந்த தபோதனர் களாகிய அடியார்பலர் இருந்து நடத்தும் அருட்கல்வி வழங்கும் பல பல்கலைக் கழகங்களும் உடையது.

இத்தலம் சிவ, விஷ்ணு, சக்தி மற்றும் பிரமன் முதலிய மற்றைத் தேவர்களுக்கும் எல்லாச் சார்புடையவர்களுக்கும் உரிய தலமாக நம் பெரியோர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார் கள். மனித நாகரிகம் தோன்றிய காலத்திருந்து இத்தலம் உயர்கல்வி வளர்ச்சி, ஆன்மீக வளர்ச்சி, நமது பாரதப் பண்பாட்டின் வளர்ச்சியில் சிறந்து விளங்கி வருகிறது. நமது மத தத்துவங்களின் உயிர் ஓட்டமாகத் திகழ்ந்துவருவது.

ஆஸ்திக உணர்வுடையோர் யாவரும் இத்தலத்துக்கு அவரவர் வாழ்நாளில் ஒருமுறையேனும் வந்து கங்கா நதியில் மூழ்கி விசுவேசனைத் தரிசித்தால் தமக்கு உய்வுண்டு என்று நம்பி வருகிறார்கள். அங்குச் செல்ல இயலாதவர்கள் தமது இறுதி நேரத்தில் ''காசி'' ''காசி'' என்று தம் நினைவில் நிற்க உயிர்விடும் பாக்கியமாவது கிட்டாதா என்று ஏங்கும் சிறப்பும் இதற்கு உண்டு. மனிதவர்க்கத்துக்கு மட்டுமல்லாது ஏனைய உயிர் வகைகளுக்கும் உய்வளிக்கும் தலம். முத்தித் தலங்களில் தலையாயது.

இவ்வளவு சிறப்புக்களும் இந்நகருக்கு உண்டாவதற்குக் காரணமாக உள்ளவை விசுவேசர் ஆலயமும், கங்கை உத்தர வாகினியாக இத்தலத்தில் ஓட்டமுடையதாக இருப்பதும்தான். முனிவர்களும் இத்தலத்தில் தங்கித் தவமியற்றித் தாம் இத் தலத்தில் உயிர் விடுதல் வேண்டும், தம் உடல் இக் கங்கை யில் இடப்படுதல் வேண்டும் என்று பிரார்த்திப்பர். அவ்வித மாகப் புகழுடம்பு பெற்ற பல தபோதனர்களின் பூத உடலை இக்கங்கையில் மணிகர்ணிகைக்கட்டத்தில் இடுதல் இன்றும் நடைபெறுவதொன்று. அம்மா முனிவர்களின் அஸ்தி இங்கு

கங்கையின் ஆழத்தில் இருப்பது இத்தலத்துக்கு ஒரு சிறப்பு என்பர் அறிவில் மேலோர்.

ஆரியர்களுள் காசியஸ் என்ற பிரிவினர் இங்கு வந்து தங்கியதால் இந்நகர் காசி எனப் பெயர் பெற்றது என்போரு முண்டு.

மனு வம்சத்தில் காசா என்னும் அரசன் இதனைத் தன் ஆட்சித் தலைநகராகக் கொண்டிருந்த படியால் இது காசி எனப் பெயர் பெற்றது எனவும் சொல்லுவர். ஔரங்கசீப் காலத்தில் இந்நகர்ப் பெயரை முகமதாபாத் என்று மாற்றி அமைத்தான். அது நிலைக்கவில்லை. அவன் காலத்துக்குப் பின் அப்பெயர் மாறி வாரணசி எனவே வழங்கிவருவதாயிற்று. ஆங்கிலேயர் காலத்தில் அவர்கள் மொழியில் இது பனாரஸ் என்று வழங்கப்பட்டது.

காசி என்ற சொல்லுக்கு கா - ஒளி, சி - திருமகள் ; அதாவது ஒளியாகிய முத்தித் திருமகளை அருளவல்லது. விளக்கமாகச் சொல்லவேண்டுமானால் விசுவேசன் திருவருள் பெற்றோர் இந்நிலவுலக வாழ்வில் பெருஞ்செல்வத்தையும், உடலை விட்ட பின்பு முத்தித் திருமகளையும் அருளப்பெறுவர் என்பதாகும். இதனைச் சொல்ல வந்த காசி ரகசியம் அஷ்டமங்கலங்களையும் அருளிச்செய்து முடிவில் முத்தித் திருமகளை மணம் புணர்த்தி வைக்கும் என்று சொல்கிறது கவிநயத்தோடு. இதே கருத்தைத் தருமையாதீனம் பத்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகளவர்களும் "எல்லை பிரியாதபேர் என்பொடு அரவாபணராய் இன்பமுத்தித் திருவையிவர் (விரும்பி) புணர்காலம் என்று, அகிலநாதர் குருவாய்ப் புவனங்கள் தொழ மந்திரமறை சொல கங்கையலை பொற்குடமுழா முழக்க போதமிகு நித்யகல்யாண மணவறையாய்ப் புகழ் கொண்ட காசி" - (அன்னபூரணியம்மை திருவருட்பா) அருளியிருக்கிறார்கள். இதனையே குமரகுருபர அடிகளும் "நிணம் புணர்வெண் தலைக்கலன் கொனேரிழை முத்தித்திருவை மணம் புணர்வார்க்கு ஐயன் அருள் மணவாளக் கோலமே" என்பார். உலகியலில் திருமணம் கொள்வோர் மணம்பொருந்திய மலர் மாலை அணிவிக்கப்பெறுவர். ஆனால் அவிமுக்தேசராகிய நீரோ, சாருப முத்தியாகிய திருமகளை ஆன்மாக்களுக்குத் திருமணம் முடித்துவைத்து எலும்பு மாலைகளையும், தலையோட்டையும்

அணிகலன்களாக அளிக்கின்றீரே என்பார் சொரூப முத்தி என்பதாம். யாவரும் முடிவில் விரும்புகின்ற ஒளியாகிய முத்தித்திருவை அளிக்கவல்லது ; அதனையே தன் பெயராகக் கொண்டது.

காசியைத் தத்துவ முறையில் அமைத்துச்சொல்லும்போது நமது உலகத்தை ஒரு மாபெரும் வடிவாகக்கண்டு (விராட் ரூபம்) அதற்குக் காசியை புருவமத்தி (ஜோதிஷ் உள்ள இடம்) யென்று கொள்ளப்படுகிறது. பஞ்சாட்சரத்தில் உயிர்களைக் குறிக்கும் எழுத்தாகிய '' யகர '' வடிவாக இந்நகரம் அமைக்கப் பட்டிருக்கின்றது; அதாவது உயிர்கள் இறைவன் திருவடி களில் வந்து தங்கி களைப்பாறுவதுபோல இங்கு வந்தடைந்த உயிர்களும் அந்நிலை பெற்றதாகும் என்பர். மேலும் சிவ பெருமானுடைய திரிசூலவடிவு என்பாருமுண்டு.

காசி ஒளி மயமானது என்பதை இவ்விதமாகவும் கூறுவ துண்டு. ஆதிவராக கல்பத்துக்கு முன்னேற்பட்ட பிரளயத் தில் இவ்வுலகம் நீரில் அமிழ்ந்துபோயிற்று ; அப்போது எல்லாத் தேவர்களும் மாமுனிவர்களும் கேட்டுக்கொண்டதற் கிணங்க விஷ்ணு ஸ்ரீ விசுவேசரை மனதில் தியானித்துக் கொண்டு வராக உருவேற்று அந்த ஜலப் பிரளயத்தில் இறங்கித் தன் ஒற்றைக் கொம்பால் உலகத்தை அத்தண்ணீரி லிருந்து மேலே எழுப்பிக்கொண்டுவந்தார். அது மீண்டும் நீரில் ஆழ்ந்துபோகாதிருக்கும்படி அருளவேண்டுமென்று காசி விசுவேசனையே வேண்டி வரமும் பெற்றார். அவ்விதமாக உலகம் முழுவதும் நீரில் ஆழ்ந்திருந்தபோதும் காசித் தலம் மட்டும் நீரில் அமிழ்ந்துபோகாமல் தண்ணீரின்மீது உயர்ந்து நின்று தனி ஒளி பரப்பிக்கொண்டிருந்தது. இதனால் இக்காசி ஒளியுடையதென்பதாயிற்று.

அந்த ஆதி வராக கல்பத்துக்கு முன்னதாகவே — அதாவது உலகோற்பத்தி ஏற்பட்ட நாள் முதலாக இக் காசித் தலமும் பெருமானைப் போலவே அழிவுபடாமல் நித்திய வாழ்வுடையதாய், தன்னை வந்து அடைந்தவர் களுக்கும், அவ்விதம்வர இயலாது தன்னை நினைத்தவர்க்கும் முத்தி அளிக்கவல்லதாய் – பிரகாசமுடையதாய். சிவபெருமான் உயிர்கள் மாட்டுக்கொண்ட பெருங்கருணையினால் உகந்து எழுந்தருளியிருந்து உய்வளிப்பதாய், சிவபரம்பொருள்போல்

அபேதமாய் பிரகாசித்து நிற்பது. பரமன் பிரமாணங்களுக்கு அடங்காது அப்பாற்பட்டு நிற்பதுபோல இக்காசியும் பிரமாணங்களுக்கு அப்பாற்பட்டது. “களங்கமற்றயாம் சிறப்பு மிக்க ஜோதி வடிவாய் இங்கு வாசம் செய்வதால் இத்தலம் காசி என்று பெயர்பெறும்'' என்று சிவபெருமான் பெருமாட்டிக்கு உபதேசித்ததாக காசி ரகசியம் கூறுகிறது. வேத வாக்கியங்களின் லட்சியார்த்த ரகசியமாக, வேதங்களால் புகழப்படுவதாக, இங்கு விரும்பித் தங்கித் தவம் செய்யும் மாமுனிவர்களின் மனதில் ஞானத்தை இடைவிடாது தங்கவைக்கும் மகிமை யுடையதாக, மிகச் சிறந்த புகழமைந்த விளக்கமும், பெருக்கமும், அலைகள் முழங்கப் பெறுவதுமான கங்காநதியை உடையதாக, பெருமை உடைய எல்லோராலும் புகழப்படுவதாக, யாவராலும் சிந்திக்கப்படுவதாக உள்ளது.

ஸ்ரீ காசி சிவபெருமான் விரும்பித் தங்கியிருத்தலால் தெய்வக்காசி யெனவும், ஞானதருமத்தை உயிர்களுக்கு உபகரிப்பதால் தருமவனம் எனவும், உலகியல் பொருள்களையும் அளிக்கவல்லதாம் தன்மை உடையதால் அர்த்தவனமெனவும். மேலான இன்ப போகங்களை எளிதாக அளிப்பதால் ஆனந்த வனமெனவும், கிட்டுதற்கு ஒற்றுமையுடைய திருவருளை உதவும் தன்மையினுல் முத்திவனம் எனவும், ஆன்மகோடிகள் இங்கு உயிர் நீப்பினும், வேறு எங்கு இருந்தாலும் ஸ்ரீ காசி ஸ்ரீ காசி என்று எண்ணிக்கொண்டே உயிர் நீப்பினும் அங்குப் பெருமாட்டி அவ்வுயிர்களுக்கு ஆதரவுகாட்டி அயர்வுபோக்கவும், பெருமான் உயிர்த்தாரகமாகிய மகாமந்திரத்தை அவ்வுயிரின் வலது காதில் ஓதி உய்வு அளிக்கவும் ஆகுமாதலால் தாரகக்ஷேத்திரம் எனவும், கௌரிமுகம், ருத்ரவாசம், மகாஸ்மசானம், அபிமுக்தேசம், பஞ்சக்ரோச சொரூபலிங்கம், வாரணுசி, வாரணவாசி* எனவும் பல பெயர்களை உடையது.

இங்கு எத்தெய்வத்தைக் குறித்துத் தவம் இயற்றினுலும் காசி விசுவேசன் அதனை ஏற்று அவரவர் விரும்பிய உருவில் எழுந்தருளிவந்து வேண்டியவரங்களைத்தந்து காத்தருளுவன்.

---

* கலித்தொகையில் இது வாரணவாசிப்பதம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இங்கு விசுவேசரை ஆண், பெண் என்ற பால்பேதமின்றி, வருணபேதமின்றி யாராயிருந்தாலும் தம்மைத்தொட்டுவழிபட அருள்சுரந்துநிற்கிருன். விசுவத்தை ஆளும் தன்மையாலும், அருள் சுரக்கும் அகில நாயகனுகவும், பெரிய தெய்வங்களுக்கும் பெரியவனுகவும், அவனுக்குமேல் பெரியவன் இல்லே எனும்படியாகப் பெரியவன் என்ற பொருளில் வேறெந்தப் பெயரும் கொள்ளாமல் விசுவேசன் என்றே பெயர் கொண்டுள்ளான். எல்லாவற்றையும் தன்னகத்தே ஒடுக்கிக்கொண்டு, எல்லாம் தாளுக விளங்கும் பெருமையுடையவன், உயிர்களுக்கு அன்னமும், பிற செல்வமும், எல்லா நலங்களும் அருளும் அன்னபூரணியாகவும், அவ்வுயிர்கள் யாதாகி எங்கிருந்தாலும் உய்ய வேண்டுமென்று தம் திருக்கடைக்கண் நோக்கால் அருள் வழங்கிவரும் விசாலமான கண்களே உடைய விசாலாட்சி அம்மையாகவும், தமது பாகம் பிரியாத உமையை உடைய பெருமையுடையவன்.

பொதுவாக சிவபெருமான் கங்கையைத் தம் திருமுடியில் தரித்துக்கொண்டிருக்கிருர். உமையம்மையை இடப்பாகத்தில் அமர்த்திக்கொண்டிருக்கிருர் என்று பல வரலாறுகள் உள்ளன. நமது திருமுறைகளும் பிற நூல்களும் அவ்விதமே கூறுகின்றன. ஆனல் காசி ரகசியத்தில் வேருெரு செய்தி கிடைக்கிறது. அதாவது :-

மலேயரசன் இமவானுக்கு குடிலே, உமை என்று இரு புதல்விகள் இருந்தனர்; இருவருக்கும் மணப்பருவம் வந்துற்றது. தேவர்கள் முதலில் குடிலேயைச் சிவபெருமானுக்குத் திருமணம் முடிக்க எண்ணிவந்து அழைத்துப்போயினர். அவர்கள் பிரமனுறையும் சத்திய உலகத்தின் வழியே சென்றனர்; குடிலேயின் அழகில் மயங்கிய பிரமன் அவளே நீர் உருவாகும்படியும்; அந்த நிலேயில் பிரம்மலோகத்தில் தங்கி ஓடிக்கொண்டிருக்கும்படியும் சபித்துவிட்டான். அவ்வாறே குடிலே நதியாகி, கங்கை எனும் பெயர்தாங்கி அங்கு நிலவி வந்தாள். நீண்டகாலத்துக்குப்பிறகு சகர புத்திரனுகிய பகீரதன் பிரமனேக் குறித்துப் பெருந்தவம் செய்து கங்கையை இந்நிலவுலகுக்குக் கொண்டுவந்த காலத்தில் மிகுந்த வேகத்தோடும், இரைச்சலோடும் இறங்கிவிழும் அதன் வேகத்தைத் தணிப்பான்வேண்டி சிவபெருமான் தம்சடைமுடியில் அதனேத்

தாங்கி வேகம் கெடுத்து கீழே மண்மீது ஒரு சிறிது விட்டருளினார். அந்தக்காலத்தில் பெருமான் கங்காதேவி பிரார்த்தித்துக் கொண்டபடியே அவளையும் தம் தேவியாக ஏற்று இடப்பாகத்தில் உமை வீற்றிருப்பதனால், வலப்பாகத்தில் அமர்த்திக் கொண்டார். ஆகவே, சிவபெருமான் வலப்பாகத்தில் கங்காதேவியும் இடப்பாகத்தில் உமையம்மையும் ஆக இருதேவியரும் பொருந்த உயிர்களுக்கு மூவரும் அருள்வழங்குகின்றனர். உயிர்களிடத்துண்டாகும் பசிப்பிணியைப்போக்கும் அன்னபூரணியை தமது இடப்பாகத்திலும், தாகத்தைப்போக்கும் கங்காதேவியைத் தமது வலப்பாகத்தும் ஏற்றுக்கொண்டிருக்கிறார் நம் பரமன் என்று குறிப்பிடுகிறது காசி ரகசியம்.

“நாம வேற்படைக் கடவுளைப் பயந்தருள்
கங்கை தென்கமலேசர்
வாம பாகத்தைக் கொள வலப்பாக நீர்
மங்கை கொண்டனள் போலாம்” (குமரகுருபரர்)

தங்கெழி லிமயந் தோன்றிச் சத்திய வுலகம் புக்குப்
பங்கயன் சாபமேற்றுப் பாய்புனல் வடிவாய் நின்று
சங்கரன் சடைவீழ்க் கங்கை தனியுமைக் கக்கையாவாள்
.................................... (சிவபரத்துவநிச்சயம்)

நிலவுலகில் விடப்பட்ட கங்கையாகிய ஒரு பகுதி இப்போதும் நதி உருவத்தில் நிலவிவருகிறது. சங்கற்பம் செய்து தன்பால் வந்து மூழ்கியவர்களுக்குச் சொல்லுதற்கரிய கொடுமையாகிய பாவங்களாகிய விலங்கைத் தரித்துப் புண்ணியத்தில் விடுத்து எல்லாச் சிவதருமங்களையும் செய்த நன்மை அவர்களுக்கு உண்டாகும்படி அனுக்கிரகம் வழங்கி யருளுகின்றனள் அக்கங்காதேவி. விராட்புருஷனின் புருவமத்தியாகக்கொள்ளும் இக்காசியில் பிறை அணிந்திருப்பதை ஒப்ப வளைந்து கங்காநதி இங்கு வடக்காகி ஓடுகிறது. கங்கைக் கரையில் நின்று பார்த்தவர் வியக்கும்படி உயரமான பல அடுக்குகளை உடைய கட்டிடப்பகுதிகள் நிரம்பியதாய் பெரும்பாலும் படித்துறை அமைப்புடன் பரவசமூட்டும் வகையில் அமைந்திருக்கிறது.

காசியில் முத்தித் தலங்கள் ஏழனுள் மற்றை ஆறு தலங்களும் அடங்கி இருக்கின்றன. அவை :-

| காசித் தலத்தில் | மற்றை ஆறு | மிகுந்த பயனளிக்கும் பருவம் | மாதங்கள் | பயன் | அங்கு மரணம் கிட்டுவதால் பயன் |
|---|---|---|---|---|---|
| சங்கோத்திரம் | துவாரகை | ருது வர்ஷ | ஆவணி புரட்டாசி | முக்தி | சாமீப்ய முக்தி |
| விந்துமாதவம் | காஞ்சி | சரத் | ஐப்பசி கார்த்திகை | அஷ்டசித்தி | அஷ்டாங்கயோகம். சித்தியாகி பின்முத்தி |
| வருணதீரம் | மதுராபுரி | வசந்த | சித்திரை வைகாசி | பக்தி | சிவயோகவானடையும் முத்தி |
| சோமேசம் | அயோத்யா | கிரீஷ்ம | ஆனி ஆடி | ஆதி ஆன்மீகம் ஆதி தெய்வீகம் ஆதிபௌதிகம் தாபத்திரயம் | விஷ்ணு சாருப்யம் |
| இராமேசம் கங்காத்வாரம் | மாயாபுரி | சிசிர | மாசி பங்குனி | கோபம், ரஜதம் நீக்கம் | முக்தி |
| விருத்த காளேசம் முதல் கீர்த்திவாசம் வரை | அவந்திகா | ஏமந்த | மார்கழி தை | வியாதி நீக்கம் | முக்தி |
| வீசுவேசம் | ஸ்ரீ காசி | எல்லாப் பருவங்களிலும் | | சிவசொரூபமுக்தி | |

## காசியில் சங்கற்பம் செய்து ஸ்நானம் செய்யவேண்டிய முக்கிய தீர்த்தங்களும் நேரமும் :-

கங்கையில் 64 கட்டங்கள் சிறப்பாகத் தீர்த்தமாடவேண்டியதிருக்கின்றன. இயலாதவர்கள், வருணா, மணிகர்ணிகா, தசாஸ்வமேதம், பஞ்சகங்கா, அசி இவ்வைந்து கட்டங்களிலாவது மூழ்குதல் வேண்டும்.

கங்கை - முப்போதும்

மணிகர்ணிகா - நடுப்பகல்

பஞ்சகங்கா<br>பஞ்சதீர்த்தம் } உதயகாலம். பிறகு முறையே வருணா சங்கமம் சூடலங்கர் சந்நதியில் பிரயாகை தீர்த்தம், தசாஸ்வமேதம், அசி சங்கமம்.

## காசியில் சென்று தங்கி கங்காஸ்நானம் வழிபாடுகள் முதலியன செய்யவேண்டியதற்கு விதிமுறைப்படி மிகவும் சிறந்தகாலம்:-

ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ; அடுத்த நிலையில் - மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி.

## தவருது தரிசிக்க வேண்டிய மூர்த்திகள், அதன் பயன் :-

அவிமுக்தம் - எல்லா இன்பங்களும்

விரேசம் - பாவமொழிப்பு.

மணிகர்ணிகேசம் - உண்மை ஞானம்.

அமுதேசம் - இப்பிறவியிலேயே எல்லா நற்பயன்கள்.

கேதாரேசம் - சந்ததி அபிவிருத்தி.

இரத்தினேசம் - சம்பத்து.

பாண்டியன் கட்டிய புண்ணிய கீர்த்தி - முத்தி.

விருத்தகாளேசம் - சம்பத்து.

சந்திரேசுவரம் - அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானம் சித்திக்கும்.

பிரமேசம் - தீவினைகள் கெடும்

திரிலோசனேசம் - உலகியல் நற்பெரும் பயன்கள் அனைத்தும்.

ஓங்காரேசம் - எல்லா நல வாழ்வுகள்.

கவர்த்தீசம் - சொரூப முத்தி.

அக்னேசம் - சகல யாக பலன்கள்.

பஞ்சக்ரோசம், அந்தர்க்ருகம், சப்தரிஷி, அஷ்டாயதனம், அஷ்டபைரவம், நவகௌரி, நவதுர்க்கா, தசாயதனம், நித்யம், ஏகாதசமகாருத்ரம், துவாதசாதித்யம் எனப்பல. இவற்றைச் செய்யும் முறைகளும் வகுக்கப்பட்டிருக்கின்றன. குறைந்தது ஒரு கர்ப்பவாசம் அல்லது காசித்தும்பை விதையைப் பூமியில் இட்டு அது முளைத்து, பூத்து, காய்த்து, பலன் அளிக்கும் காலம் வரையாவது தங்கி முறைப்படி ஸ்நானம் வழிபாடுகள் முதலியன செய்தல் வேண்டும். காசியில் தண்டம் (வழிபாடு), பிரயாகையில் முண்டம், (முடியிறக்கிக்கொள்ளுதல்). கயையில் தம்முன்னோருக்குப் பிண்டம் இடுதல் வேண்டுமென்பர் மேலோர்.

கங்காகேசவர் முன் சென்று அவிமுக்த நாயகனைத் தியானித்து அவர் அருள் வேண்டி இந்த யாத்திரைப் பயன் முழுதும் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து காசிவாசம் தொடங்குதல் வேண்டும். அபரபட்சத்துத் துவாதசி உதயத்தில் கங்கைக் கரையை அடைந்து கங்காதேவியைத் துதித்து அவள் அருள் வேண்டிப் பிரார்த்தித்து முறைப்படி சங்கல்பம் செய்துகொண்டு கங்கையில் மூழ்குதல் வேண்டும். இதன் பயன், நாம் வேண்டும் எல்லாப்பயன்களும் நிலையாக இருக்கும்; சித்த சுத்தியும், உயர் ஞானமும் கைகூடும்.

**மூர்த்திகளில் பிரதிஷ்டையால் சிறந்தவை :-**

அவிமுக்தம் : சிவபெருமானால் பிரதிஷ்டை செய்விக்கப்பட்டது.
(தன்னைத்தானே வழிபட்டதலம்)

ஓங்காரேசம் : பிரமன் பிரதிஷ்டை.

கேதாரேசம் : மாந்தாதா பிரதிஷ்டை.

**முக்கியமாகத் தரிசிக்கவேண்டிய மூர்த்திகள் :-**

துண்டிராஜ கணபதி, விசுவேசர், அன்னபூரணி, விசாலாட்சி, கேதாரேசர், பிந்துமாதவர், துர்க்கை, காலபைரவர், ஞானவைராக்ய தண்டபாணி.

இவ்வூரில் இருந்து செய்யவேண்டிய யாத்திரைகள் : இவை ஒவ்வொன்றும் ஒவ்வோர் வழியில் சிறந்த பயன் அளிக்கும்.

**வரலாறுகள் :-**

இப்போது நாம் காணும் விசுவேசுவரர் ஆலயம் 1777-ல் ராணி அகல்யாபாயினல் கட்டப்பெற்றது. இதில் உள்ள மண்டபங்கள் குவாலியரைச் சேர்ந்த மகாராஜாவால் 1825-ல் கட்டப்பட்டன. அதற்கு முன்னிருந்த ஆலயம் முகம்மதிய கொள்ளைக்காரனை குத்புதீன் என்பவனல் அழிக்கப்பட்டு, அங்குள்ள பொருள்கள் கொள்ளை கொள்ளப்பட்டன. அவன் அகன்றதும், வேறொரு ஆலயம் எழுப்பப்பட்டது. அதனையும் அல்லாவுதீன் என்பவன் இடித்தெடுத்து, அதில் உள்ளவற்றைக் கொண்டு "ஜெனன்புரி" எனும் பெயரில் மசூதி கட்டுவித்தான் என்பது கல்வெட்டுக்களால் அறியவருகின்றன. மொகலாய மன்னன் அக்பருடைய மந்திரியாக இருந்த தோடர்மால், மீண்டும் விசுவநாதருக்கு ஓர் ஆலயம் கட்டுவித்தான். அதுவும், ஔரங்கசீப்பினல் 1759-ல் அழிக்கப்பட்டு விட்டது. முன்னிருந்த பழய ஆலயத்தின் லிங்கத் திருமேனியும், நந்தியும், ஞானவாபி தீர்த்தமும் இப்போதுள்ள விசுவநாதராலயத்தின் பின்புறம் இருக்கின்றன.

ஔரங்கசீப் ஆலயத்தை இடித்து சிவலிங்கத் திருமேனியைக் கங்கையாற்றில் எறிந்துவிட்டான். திருமேனி தீண்டி வழிபாடியற்றிவந்த பூஜகரான நாராயணபட்டர் இக்கவலையால், மீண்டும் பெருமானுக்கு ஆலயம் அமைக்காது ஊணும், உறக்கமும் கொள்வதில்லையென்று சங்கல்பம் மேற்கொண்டு மௌன நிலையில் தவம் மேற்கொண்டார். ஒருநாள் அவர் கனவில் பெருமான் தோன்றிக் காட்சியளித்துத் தாம் கங்கையில் இன்ன இடத்தில் இருப்பதாகவும், தம்மை எடுத்துவந்து இன்ன இடத்தில் ஆலயம் இன்றுரைக்கொண்டு புதிதாக எழுப்புவித்து அதனினும் இன்ன அடையாளம் தோன்றும் இடத்தில் லிங்கத்திருமேனியைப் பிரதிஷ்டை செய்தல் வேண்டும் என்று அருளிச்செய்தார். அவர் கனவு கலைந்து பெருமானை நினைந்து வழிபட்டுருகி கட்டளைப்படியே கங்கையாற்றில் தேடி வெளிக்கொணர்ந்து மகிழ்ந்தார். இதேபோல

குவாலியர் மகாராணி அகல்யாபாயின் கனவிலும் பெருமான் எழுந்தருளி உத்தரவாகியிருந்ததறிந்து அங்குச் சென்று ராணி அம்மையாரை அழைத்துவந்து பெருமான் கனவில் நிகழ்த்திய அற்புதத்தை விளக்கிச்சொல்லி அவர் (பெருமான்) காட்டியருளிய அந்த இடத்திலே ஓர் ஆலயம் அமைக்கச் செய்தார். மேலும், கனவில் உத்தரவானபடி அவ்வாலயம் முழுவதும் கற்பூரத்தைப் பரப்பச்செய்து எந்த இடத்தில் அது தானுகத் தீப்பற்றி எழுந்ததோ, அங்கு விசுவேசலிங்கத் திருமேனியைப் பிரதிஷ்டை செய்தார். அதற்கு நன்றியாக அவ்விருவர் திருவுருவங்களும் இவ்வாலயக் கருவறையில் சலவைக் கல்லில் பொறித்திருப்பதையும் காணலாம்.

(தொடரும்)

---

EXTRACT FROM THE VISITORS BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswami Devasthanam Vaithiswarankoil

Had the rare pleasure, privilege of worshipping this famous temple this evening I am very proud to say that cleanliness and efficiency in the administration of temple cannot be found in any other temple in India. We all pray that the present Maha Sannidhanam will live long to do similar service for mankind's salvation.

(Sd) N M. Swaminathan,
63, Prince of Wales Mansions,
Prince of Wales Drive,
LONDON S W. 11
Manager: Mermaid Theatre,
LONDON E. C A. U. K.

19–8–70.

# திருவாவினன்குடித் திருப்புகழ்

செஞ்சொற்கொண்டல், புலவர்,

திரு. சொ. சிங்காரவேலன் M. A., Dip.Ling.

**பழனி :**

திருவாவினன்குடி என்ற பெயர் பெற்ற பழனித் தலத்திற்கமைந்த திருப்புகழ்ப்பாக்கள் தொண்ணூற்று ஐந்தாகும். ஆவினன்குடி, பழனிஎன்ற இருபெயர்களுமே அருணசிரியாரால் கூறப்பெற்றுள்ளன.

> " படிக்கின் றிலை பழநித் திருநாமம்
> படிப்பவர்தாள்
> முடிக்கின் றிலை "

என்று கந்தரலங்காரத்திலும் (75) புகழ்வர் இவ்வருளாளர். 'சிவமயமாம் நின் பழநி' (156) 'பதினாலுலகுக்கோர் புகழ் பழநி' (170) என்றும் இவரே புகழ்வர். அத்துணைச் சிறப்புடைய இத்திருத்தலத்தே முருகன் பழமாக இருந்து அருள் வழங்குகின்ருன்.

**சேரர் கொங்கு :**

ஆவினன்குடி கொங்குநாட்டின் எல்லையுட்பட்டது. கொங்குநாடு என்று கூறும்போது அடிகளார் நினைவில் வருவது சேரர் செழுமரபே. சேரர்குடித் தோன்றிச் செந்தமிழ்க் கவிஞராக விளங்கிச் சுந்தரர்க்கு உற்ற தோழராக ஒளிர்ந்த சேரமான் பெருமாள் அவர் நினைவில் வருகின்ருர். அவர் வெள்ளானை மேல் சுந்தரர் செல்லத் தாமும் குதிரைமீது ஏறித் திருக்கயிலை சென்றதும் அங்கு ஞான உலாப்பாடிய நற்செய்தியை நினைகின்ருர். அனைத்தும் ஆவினன்குடி உடையவனின் திருமுன்பு விளைகின்ற எண்ணங்கள். அவரது அற்புதமான பாடற்பகுதி இது.

" ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல்கொண்டவ ரோடேமுனளினிஸ்
ஆடல்வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதியந்த உலாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனுடதில்
ஆவி னன் குடி " (100)

இவ்வாறு சேரர் கொங்கு நாட்டைச் சிறப்பிக்கும் அருணகிரி யார்க்கு வயலூரில் பெருமான் காட்சிதந்த அழகு மறக்கவில்லை. இதே பாட்டின் முதல் வரியில், ஏழு புவியில் உள்ளோரும் புகழ் கின்ற காவிரியாற்றினல் செழிப்புற்று வளம் பெருகுகின்ற சோழ மண்டலத்தில், இராசகெம்பீர வளநாட்டிடை உள்ள வயலூர் அது என்கின்றார்.

" ஏழ்தலம்புகழ் காவேரி யால்விளை
சோழமண்டல மீதே மனோகர
ராஜகெம்பிர நாடாளு நாயக வயலூரா " (100)

அருச்சனைப் பாட்டு :

முதல் இரண்டு பாடல்கள் 'நமோநம' என்ற தொடர்கள் இருபத்துநான்கு முறை வர அமைந்துள்ளன. 'அருச்சனை பாட்டே யாகும்' என்று சேக்கிழார் கூறியபடி இத்தொடர்கள் திரும்பத் திரும்ப இங்கு வந்து ஒரு மந்திர இயல்பைத் தருகின் றன. இந்த இரண்டு பாடல்களும். ("நாதவிந்து" 100) ஒவ்வொன்றும் ஒன்பதுமுறை சொல்லப் பெறுமாயின், நூற் றெட்டு முறை அவன் திருப்பெயரை (12 x 9) உரைக்கத்தக்க நிலையில் அமைந்துள்ளன. இந்த இரு பாடல்களையும் நாற்பத் திரண்டு முறை (24 x 42) ஓதி நிறைவு செய்தால் ஆயிரத் தெட்டு முறை அவன் திருப்பெயரைக் கூறிடும் முறையில் அமைந் திருக்கின்றன. திருப்புகழ் கூறி வழிபட விழைவோர், திருவா வினன் குடிச் செவ்வேட்கு நூற்றெட்டு முறையாகவேனும், ஆயிரத் தெட்டு முறையாக வேனும் வழிபட்டு ஓதிட விழை வோர் இவ்விரண்டு திருப்பாட்டுகளை மட்டுமே பயன்படுத் திடலாம்; இவ்வாறு அமைந்துள்ள அருமைப் பாட்டினை என்னென்று கூறி மகிழ்வது!

சரியை வழிபாடு :

'ஞானநெஞ்சினர்'ரோடு இணைந்து வழிபட வேண்டும் என்று (103) வேண்டுகின்ற அருணகிரியார்க்குச் சரியை நெறி யில் நின்றிடவும் உளம் விழைகின்றது :

"போது கங்கையி னீர்சொரிந்திடு
பாதபங்கய மேவணங்கியெ
பூசையும் சிலவே புரிந்திட அருள்வாயே" (104)

என்றும் விண்ணப்பம் செய்கின்றார்.

## செபமாலை தந்த சிறப்பு :

திருவாவினன்குடிப் பெருமான் திருமுன்பு நின்று அருள் பெற, திருவடிப்பேறு பெண்மாயை தீர விண்ணப்பம் செய்கின்றார் பல திருப்பாடல்களில். தமக்கு வயலூரில் செய்த பெருநன்றி அவர் நெஞ்சில் கனிவினை உண்டாக்குகின்றது

"பாதபங்கய முற்றிட வுட்கொண்
டோதுமன்பர் திருப்புகழ் நித்தம்
பாடுமன்பது செய்ப்பதி யிற்றந் தவனீயே" (105)

இங்குச் 'செய்ப்பதி' என்றது வயலூரையே அன்றோ? அருணகிரியார்க்கு ஆவினன்குடியான் உருத்திராக்கமாலை ஒன்றைத் தந்தனை அதனைப் பெற்ற அடிகளார்க்குப் பெருமகிழ்ச்சி

"செபமாலைதந்தசற் குருநாதா
திருவாவினன்குடிப் பெருமாளே" (106)

என்று பாடிப்பாடி மகிழ்கின்றார். இனி 'உனை நான் நினைந்து அருட்பெறுவேனோ' என்று கூறிக்கூறிக் குளிர்கின்றார்.

## திருவடிப் பேறு :

சொல்லுதற்கு அருமையான செந்தமிழ் இசையிலே சில பாடல்களை அன்பொடு பயிலுதற்கு வேண்டிப் பல நூல்களையும் படித்து உணர்தல் வேண்டும் என்பது அடிகளார் கருத்து. இதனை எதிர்மறையாகத் தம்மேல் இட்டுக் கொண்டு

"பகர்தற் கரிதான செந்தமிழ் இசையிற்
சிலபாடல் அன்பொடு
பயிலப் பல காவியங்களை உணராதே" (110)

என்று பாடி உணர்த்துகின்றார் திருவடி தீட்சை இயல்பினை,

"எனது தலையிற் பதங்கள் அருள்வோனே" (114)

என்று கூறி மகிழ்வதும் இவர்க்கு இயல்பாகும்.

**அடியாரிணக்கம் :**

அடியவர் இணக்கம் அடிகளாற் பல பாடல்களிற் பேசப் பெற்றுள்ளது. சங்கமபத்தி என்று சாற்றப்பெறும் அடியார் கூட்டுறவு இவராற் பெரிதும் புகழ்ந்தேததப் பெற்றது.

"ஏனை நீயுன் அடியரொடு
கூடும்வகைமையருள் புரிவாயே" (121)

என்றும், இன்னோரன்ன பல விடங்களிலும் இவ்வேட்கை வடிவம் பெற்றுள்ளமை காணலாம்.

**அகப்பொருள் நோக்கு :**

நற்றாய் ஒருத்தி தான் பெற்ற நங்கை ஒருத்திநிலைக்கு இரங்கி நவிலுவதாக மூன்று பாடல்கள், (127, 145, 164) பழநித் திருப்புகழ்ப்பாக்களுட் காணப்பெறுகின்றன. ஒரு பாட்டில் நீ உன் பிணையல் (மாலை) தருக என்றும், பற்றதில், நேரே மயில் மீது வந்து மனத்துயர் மாற்றுக என்றும் வேண்டும் திறம் காணலாம்.

**முத்தமிழ் :**

முத்தமிழைத் 'தமிழ்த் திரயம்'(126) என்று வட சொற் புணர்த்தானுவர் அருணகிரியார். அதுமட்டுமின்றித் தமிழில் அகப்பொருள் நெறிக்குப் பேரின்பப் பொருள் கொள்ளவும் கூடும் என்பது 'ஞான படலத்துறு லக்னலக்யத் தமிழ்த்திரயம்' (126) என்ற தொடரால் அறியக் கிடக்கின்றது. முப்பால் செப்பிய கவிதை' (156) என்று திருக்குறளைக் குறிக்கும் அருண கிரியார், அதனினும் திருஞானசபந்தர் தேவாரம் மிக்க தென் றிசைக்கின்றார்.

**தற்சுட்டு :**

பழனித் திருப்புகழ்ப் பாடல்களில் ஒருபாடல் (131) அருண கிரியார் அருளியதாக இருக்க இயலுமா என்றோர் ஐயத்தை விளைக்கின்றது. ஏனெனில், 'அருணகிரி' என்ற சொல்லே அதனுள் வருகின்றது ;

"மிளிரு மதுர கவிதை ஒளிரும்
அருண கிரிசொல்
விஜயகிரிசொல் அணிவோனே" (131)

என்ற அப்பகுதியில் தம்மை 'விளங்கும் சுவை நிரம்பிய பாடல் கள் ஒளிவிடும் அருணகிரி' என்று அடிகள் குறித்துக் கொள்ளல் பொருந்துமா என்று சிந்திக்க வேண்டியுள்ளது

### சம்பந்தர் முருகனே எனல் :

திருமுருகன் அவதாரமே திருஞானசம்பந்தர் என்ற அருணகிரியார் கோட்பாடு ஒருபாட்டிற் புலனாகின்றது.

" பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் திருநீறு
பரப்பியதத் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்த சொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் கவிராசர் " (135)

இதனுள் அனல், புனல் வாதங்கள் முதலியவற்றிற்றோற்றுக் கழுவேறிய சமணர்கள் திறம்காணலாகும்.

" பறிதலை குண்டர் கழுநிரைகண்டு " (172) ம் காண்க.

### வழிபடுதொழில் :

வேறொன்றும் வேண்டாமல வழிபடுதல் ஒன்றையே விழைவதும் சான்றோர் இயல்பு. இதனையே 'பக்தி யோகம்' என்று போற்றி உரைப்பர். இவ்வாறு அருணகிரியாரும் பக்தி செய்ய வேண்டும் பக்தி செய்யவேண்டும் என்றே வேண்டும் பகுதிகளும் பலவாக உள்ளன.

" அருத்தி வாழ்வொடு தனகிய மனைவியும் உறவோரும்
அடுத்தபேர்களும் இதமுறு மகவொடு வளநாடும்
தரித்த வூருமெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்பராவியும் வழிபடு தொழிலது தருவாயே " (159)

என்ற பாடற்பகுதியுள், 'வழிபடு தொழில்' தருக என்று வேண்டும் நிலையினைக் காணலாம்.

### கவிதைப் பணி :

இவ்வாறு வழிபடுகின்ற பொழுதெல்லாம் இனிய தமிழ்க் கவிதை பேசிப் பணிந்துருகு நேசத்தைத் தமக்குத்தர வேண்டும் என்று உருகி விண்ணப்பிக்கின்றார் பிறிதோரிடத்து.

" நீரிற் படிந்துவிடு பாசத் தகன்றுனது
சற்போதகப் பதுமமுற்றே தமிழ்க்கவிதை
பேசிப் பணிந்துருகு நேசத்தை யின்றுதர இனிவரவேணும் "(162)

இவ்வாறு பெறுகின்ற முருகன் திருவடிப் பேற்றைச் 'சிவகதி' (67) என்றும், 'சிவபதம்' (171) என்றும் அருணகிரியார்

உரைத்துள்ளார். யோகநூல் நுட்பமும் அருணகிரியாரால் கூறப்பெற்றுள்ளது. (190)

" மூலங்கிள ரோருவாய்நடு
நாலங்குல மேனடு வேரிடை
மூள்பிங்கலை நாடியொடாடிய "

என்றுவரும் வரிகளில் யோகசாத்திரத்தையே சுருக்கிக் கூறியுள்ளார் என்று கூறலாம். யோகநெறிநின்றாற் கேட்கப்பெறும் ஓசைகளையெல்லாம் இங்குக் கூறியுள்ளார்.

### இருமைப் பயன் :

இம்மை மறுமை யின்பங்களைப் பெறவேண்டும் என்று விரும்பாதார் யார்? பழநிப் பெருமானைப் பரவினால் இவை கிட்டும் என்று கூறுகின்றார் அடிகள் :-

" வசன மிகவேற்றி மறவாதே
மனது துயராற்றி லுழலாதே
இசைபயில்ச டாட்ச ரமதாலே
இகபர சௌபாக்ய மருள்வாயே
பசுபதி சிவாக்ய முணர்வோனே
பழநிமலை வீற்ற ருளும்வேலா
அசுரர்கிளை வாட்டி மிகவாழ
அமரர் சிறைமீட்ட பெருமாளே " (191)

இத்திருப்பாட்டினுள் 'இகபர சௌபாக்யம்' என்பது இம்மை மறுமை நலங்களையாகும் உருவேறச் செபித்தலையே 'வசனம் மிக ஏற்றி' என்றார் 'பசுபதி ஸ்ரீவாக்யம்' என்பன வேத சிவாகமங்களை. இவற்றையெல்லாம் உணர்ந்தபிரான் முருகனே ஆவன்.

சுந்தரரை (182) ஒரு பாட்டிற் கூறி மகிழ்கின்றார்; முருகன் உலகை மயிலேறி வலம் வந்தமையை (84) உரைக்கின்றார்.

### இறுவாய் :

இவ்வாறு பழனித் திருப்புகழ்ப்பாக்கள் எல்லாவகையாலும் சிறந்து விளங்குகின்றன படிப்போர்க்குப் பைந்தமிழ் முருகன் பதமலரைக் காட்டுவனவாக உள்ளன இவ்வரும் பாடல்கள். இனிய பல சந்தக் குறிப்புக்களுடன் இயலும் இவை பல குறிப்புக்களை உள்ளடக்கி நிற்கின்றன பொதுமகளிரான் வரும் துன்பம் பொதுவாக வருணிக்கப்பட்டுள்ளன. மனிதர்க்கு வரும் நோய்கள் பலவும் குறிக்கப்படுகின்றன. அந்நோய்களிடை அழுந்தி அல்லலுறாது ஐயன் பாதம அணைந்திட வேண்டும் என்று அருணகிரியார் கருதுகின்றார்.

# அக்னி

வேதாந்த சிரோமணி,

**பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

( மலர் 29, இதழ் 7, பக்கம் 377 இன் தொடர்ச்சி )

அதேமாதிரி பிதிர்க்கள் உணவை வேண்டினர். திருமால் ஒருஅம்சத்தால் வேள்வியாகத் தோன்றவும, அவ்வேள்வியிலும் அக்கினியில் போடப்பட்ட கவ்யத்தை பிதிர்கள அடைய முடிய வில்லே. பிறகு விஷ்ணுவின் கட்டளேப்படி மூலப்பிரகிருதியின் அம்சத்தால் ஸ்வதா தேவி தோன்றினள். அவளே அக்னி பகவான் மணந்து கொண்டு பிதிர்க்களுக்கு கவ்யத்தைக் கொண்டு கொடுக்கும் சக்தியைப் பெற்ருர் ஆதலால் பிதிர்க்களுக்கு கவ்யத்தைக் கொடுக்கும்பொழுது ஸ்வதா என்று சொல்லிக் கொடுக்கவேண்டும் என்று தேவீ பாகவதம் ஸ்கந்தம் ஒன்பதில் 44 ஆவது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

அக்னி விசுவாநரனுக்குப் பிள்ளே; ஆதலின் வைச்வாநரன் என்று பெயருள்ளவன் என்று காசிகாண்டம் கூறினபோதிலும் வேதம் விராட் புருஷனுடைய முகத்தினின்றும் அக்னியும் இந்திரனும் தோன்றியதாக मुखादिन्द्रश्चाग्निश्च என்ற வாக்கியத்தால் உணர்த்தும்.

அக்னிக்கு ஸ்வாஹாதேவியிடம் தக்ஷிணுக்னி, கார்கபத்யாக்னி, ஆஹவனீயாக்னி என்ற மூன்று பிள்ளேகள் உண்டாயினர் என்று தேவிபாகவதம் கூறும. வைதிகர்கள் செய்யும் வேள்விகளில் தக்ஷிணுக்கினி கார்ஹபத்யாக்னி ஆஹவனீயாக்னி ஆகிய மூன்று அக்னிகளே பயன்படுகின்றன சில சமயங்களில் சிலருக்கு மட்டும் ஸப்யம், ஆவஸத்யம் என்ற இரண்டு அக்னிகளும் பயன்படுத்தப் படுகின்றன. ஆனல் சிவாகமங்களே அனுசரித்துச் செய்யப்படும் கும்பாபிஷேகம் முதலிய கர்மங்களில் ாலாக்னி, யௌவனுக்னி, விருத்தாக்னி தக்ஷிணுக்னி, கார்ஹபத்யாக்னி, ஆஹவனீயாக்னி, கேவலாக்னி,

சாமான்யாக்னி, சிவாக்னி என்ற பெயருடன் ஒன்பது அக்னிகள் உபயோகப்படுகின்றன.

ஜ்வாலையுடன் எரிவதிலோ. உஷ்ணகுணத்துடன் விளங்குவதிலோ பிரகாசப்படுத்துகிற தன்மையிலோ நம்முடைய பொறிகளுக்கு அக்னியில் வேற்றுமை தெரியாவிடினும், அந்த அக்னியில் மந்திரபூர்வமாகச் செய்யப்படும் ஸம்ஸ்காரங்களால்தான் அவற்றை வேறுவேறு அக்னிகளாகக் கொள்ளுகிறோம் என்பதை ஈண்டு நினைவிற் கொள்ளவேண்டும்.

ஒருசமயம் அக்னி பகவான், தேவர்களுக்கு வேலைக்காரனைப் போல உணவு தூக்கிக்கொண்டு கொடுக்க விருப்பமில்லாமையால் நீரில் மறைந்துகொண்டான். உணவு வராமல் போகவே தேவர்கள் அக்னியைத் தேடலாயினர். தேவர்கள் குளத்தின் அருகில் வந்தபொழுது அங்கே நீரில் வாழ்ந்த மீன்கள் அக்னி நீரில் மறைந்து இருக்கிறான் என்பதை தேவர்களுக்குத் தெரிவித்தன. அதனால் சந்தோஷமடைந்த தேவர்கள் "எங்களைப் போலவே உங்களுக்கும் கண்களில் இமைத்தலின்மை உண்டாகட்டும்" என்று மீன்களுக்கு வரமளித்தனர். அதனால் சினமடைந்த அக்னியோ "செம்படவரால் போடப்படும் தூண்டில் முள்ளில் மாட்டிக்கொண்டு மரிப்பீர்கள்" என்று மீன்களைச் சபித்ததாகவும் புராணம் கூறும்.

சுவேதாகி என்பவன் யானையின் துதிக்கைபோன்று நெய்தாரையைப்பெய்து வேள்விசெய்தான். அந்த நெய்யை ஜீரணம் செய்யமுடியாமல் அக்னி பகவானுக்கு அஜீரணத்தால் உடல் நலக்குறைவு உண்டாயிற்று. அதற்கு மருந்து காண்டவ வனத்தில் இருப்பதை அறிந்தான். அந்தக் காண்டவ வனம் இந்திரனுடைய பாதுகாப்பில் இருந்தமையால் அம்மருந்தை அக்னியால் உண்ணமுடியவில்லை. கிருஷ்ணன் அர்ஜுனன் இவ்விருவருடைய உதவியால் காண்டவவனத்தை எரித்தான். அக்காலத்தில் காட்டைக்காக்க வந்த இந்திரனை தன்னுடைய தந்தை என்றும் பாராமல், இந்திரனைத் தடுத்து காண்டவ வனத்தை அக்னிபகவான் உண்ணும்படி செய்தான். தனக்கு உதவிய அர்ஜுனனுக்கு காண்டீவம் என்ற வில்லை கொடுத்தான். இந்த வில்லே அர்ஜுனனுக்குப் பாரதப் போரில் பெரும் வெற்றிகளை அளித்தது. கடைசியில் பாண்டவர் சுவர்க்கம் போகும்பொழுது, அக்னியே அவ்வில்லை அர்ஜுனனிடமிருந்து வாங்கி ஒடித்து எறிந்தான் என்றும் பாரதம் கூறும். மேலும் காண்டவவனத்தை எரிக்கும்போது தக்ஷகனுடைய

பின்னை அச்வசேனனை எரிக்காமல் காண்டவவனத்தினின்றும் உயிருடன் வெளியில் செல்ல விட்டபடியால் "நிலையற்றவனாக ஆவாய்" என்று கிருஷ்ணனால் சபிக்கப்பட்டதாகவும் பாரதம் கூறும்.

மகாகவி காளிதாஸன் குமாரசம்பவம் என்னும் காவியத்தில், சிவபிரானும் பார்வதியும் அந்தப்புரத்தில் நெடுநாள் புணர்ச்சியில் ஈடுபட்டிருந்தனர். நெடுநாட்கள் ஆகியும் ஸேனாதிபதியை விரும்பும் தேவர்களுக்கு பார்வதியினிடம் புத்திரன் உண்டாகாமல் இருந்தபடியால், அகனியை புரு வேடத்தில், அந்தப்புரத்துள் செல்லுமாறு தூண்டினர். அப்பொழுது வேறு ஒருவன் உள்ளே வந்தமையால் சினமடைந்த பார்வதி "त्वं सर्वभक्षो भव" (குமா 9·16) நீ சுத்தமானது அசுத்தமான து ஆகிய எல்லாவற்றையும் புசிப்பவனாக ஆவாய் எனச் சபித்தாள் என்று அக்னிக்குச் சாபமுண்டானதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் பூவாளூர் புராணம் "புறுவாகி கல்லைத் தின்று சகோதரததை புணர்வாய்" என சபிக்கப்பட்ட தாகக் கூறும்.

பிருகுவின் மனைவியான புலோமை என்பவளைக் கவர ஒரு ராக்ஷஸன் வந்தான். ஆச்ரமத்தில் பிருகு பத்னி மறைந்திருந்தாள் அங்கு இருந்த அக்னியை ராக்ஷஸன் கேட்டான். ராக்ஷஸனுக்கு பயந்த அக்னி பிருகு பத்னியை ராக்ஷஸனுக்குக் காட்டிக்கொடுத்தான். அரக்கன் அவளைக் கவர்ந்து சென்றான். அப்பொழுது அவளுடைய கருவிலிருந்த குழந்தை நழுவிக் கீழே விழுந்தது. அக்குழந்தை ச்யவனன என்று பெயர்பெற்றான். அக்னி காட்டிக்கொடுத்தமையால்தான் அரக்கன் அவளைக் கவர முடிந்தது என்பதை அறிந்த பிருகு முனிவர் "நீ சுத்தம். அசுத்தம் எல்லாவற்றையும புசிப்பவனாய்" என்று சபித்ததாக பாரதம் ஆதிபர்வம் கூறும, சபிககப்பட்ட அக்னி வருந்திய பொழுது 'எதைப் புசித்தாலும் நீ சுத்தன்" என்று பிர்மா வரம் கொடுத்ததாகவும் உள்ளது.

விருத்திராசுரனைக் கொன்று அந்த பிர்மஹத்தி தோஷத்திற்குப் பயந்து ஒளிந்திருந்த இந்திரனிடம், நகுஷன் இந்திர பதவி யேற்று இந்திராணியை விரும்புவதைத் தெரிவித்து, இந்திரன சொல்லிய யுக்திகளைச் செய்து இந்திராணியைக் காத்தபடியால் மகிழ்ந்த இந்திரன் வேள்விகளில் தன்னுடன் ஹவிர்பாகம் பெறும் பேற்றை அக்னிக்கு வரமாக அளித்ததாகப் பூவாளூர்ப் புராணம் கூறும்.

ஒருசமயம் அக்னி தேவர்களிடம் கோபம்கொண்டு கபிலைப் பசுவின் வயிற்றில் ஒளிந்து கொண்டான். அப்பசுவைத் தேவர்கள் வேண்டி அக்னியின் நிலையறிந்தனர். பிறகு அக்னியைச் சமாதானப்படுத்தி அழைத்துச்சென்றதுமன்றி அக்னியை வயிற்றில்வைத்துக் காத்தமையால் ' நீ புண்யதேஹியாக இருப்பாய் " என்று பசுவிற்கும் வரமளித்தனர் என்று காஞ்சிப் புராணம் கூறும்.

வேள்வியில் தனக்குத் தகாத ஹவிசைக் கொடுத்தமையால் கோபங் கொண்டு மூங்கில் புதரில் அக்னி மறைந்தான். தேடிய தேவர்களுக்கு யானை காட்டிக்கொடுத்தது. அதனால் கோபங் கொண்ட அக்னி யானைகளைக் கொம்பிழக்கச் சபித்தான். பிறகு அரசமரத்தில் மறைந்த அக்னியை கிளி காட்டிக் கொடுக்கவே "தெளிவற்ற பேச்சுடையவர் ஆவீர் " என அக்னி கிளிகளைச் சபித்து நீரில் ஒளிந்தான். அங்கும் தவளைகளால் காட்டப் பட்டான். அவைகளையும் நாவிழக்கச் சபித்தான் என்று புராணம் கூறும்,

பதினெட்டுப் புராணங்களில் அக்னியால் கூறப்பட்ட ஆக்னேய புராணமும் ஒன்று. அக்னி பகவான் பூசித்தமையால் கொள்ளிக்காடு, வன்னியூர் இவை அக்னியின் பெயருடன் விளங்குகின்றன. திருவண்ணாமலை பஞ்சபூத க்ஷேத்திரங்களில் தேயு (அக்னி) க்ஷேத்திரமாகக் கூறப்படும். அகத்தியான்பள்ளி, இராமேச்சுரம், வன்னியூர், திருவெண்காடு, விளமர் என்ற க்ஷேத்திரங்களில் அக்னி தீர்த்தம் பிரசித்தமானது. அக்னிக்குக் கலைகள் பத்து என்பது

धूम्रार्चिरूष्मा ज्वलिनी ज्वालिनी विस्फुलिङ्गिनी ।
सुश्रीः सुरूपा कपिला हव्यकव्यवहे अपि ॥
यादीनां दशवर्णानां कला धर्मप्रदा अमूः ।

என்ற ஸ்மிருதி வாக்யத்தால் உணரப்படும். அக்னியின் பட்டணத்திற்கு தேஜோவதி என்ற பெயர் ஆகமங்களில் கூறப் படுகிறது. மத்ஸ்யபுராணம் 231 ஆவது அத்தியாயத்தில் அக்னி வைகிருத்யம் (அக்னியின் இயற்கைக்கு மாறுபாடுகள்) கூறப்பட்டிருக்கின்றன. அம்மாறுபாடுகளால் உண்டாகும் கெடுதல்கள் புராணங்களிலும், ஜ்யோதிட நூல்களிலும் கூறப் படும். வாயுபுராணம் 74ஆவது அத்தியாயத்தில் ஸப்தார்ச்சிர் மந்திரம் (அக்னி மந்திரம்) கூறப்படுகிறது. அக்னி பீஜம் ரீ என்பது.

(தொடரும்)

# திருவருட் பயன் விளக்க உரை

(மலர் 29. இதழ் 9. பக்கம் 505 இன் தொடர்ச்சி)

மூன்றுவது குறள்,

3. "பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்"

எனவரும்.

இதன்பொருள்: பெருமைக்கும் - எல்லாப் பொருளும் தன்னுள் அடங்க அவை எல்லாவற்றிலும் தானே பெரிய பொருளாய் அவற்றைக் கடந்து நிற்கும் தன்மைக்கும்; நுண்மைக்கும்-எல்லாப் பொருளிலும் அவற்றிற்கு உள்ளீடாய் நிறைந்து நிற்கும் சிறுமைக்கும்; பேர் அருட்கும் - அளவற்ற உயிர்கள்மீதும் என்றும் மாருது கொண்டுநிற்கும் பேரிரக்கத்திற்கும்; பேற்றின் அருமைக்கும் - பிறர் தன்னைப் பெறுதற்கரிய நிலைக்கும்; ஒப்பின்மையான் - நிகர் வேறென்றில்லாத சிறப்பினை உடையவன் எங்கள் இறைவன்.

விளக்கம்: முன்னைக் குறளில் உள்ள, 'எங்கள்பிரான்' என்பது இக்குறளிலும் வந்து இயையும்.

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்" *

என இறைவனது பெருமையும்,

"அண்டம்ஓர் அணுவாம் பெருமைகொண் டணுஓர்
அண்டமாம் சிறுமை கொண்டு" †

---

* திருவாசகம் திருவண்டப்பகுதி 1 - 6.

† திருவிசைப்பா - 13. 6.

என்று அவனது பெருமை, சிறுமை இரண்டும் கூறப்பட்ட வாறு காண்க.

அளவிலாத அருளுடையனுதல்பற்றி இறைவன் 'கரு ணைக் கடல்' எனக் கூறப்படுதல் வெளிப்படை. உயிர்கள் இறைவனைப் பெறுதற்கருமை, அவற்றிற்கு உள்ள பாசத் தடையினுலாயது. பெற்ற பின்பும் அவற்றது சிறுமையால் அவனது இயல்பு முற்றும் உயிர்களால் அறியப்படாது. அதனை,

" கடல்அலேத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
கடல்அளக்க வாராதாற் போலப் — படியில்
அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்
கருத்திற்குச் சேயனுய்க் காண் " *

என்று கூறும் திருக்களிற்றுப்படி.

இதனுல் முதற்கண் " நிகரில் இறை " என்றது இனிது விளக்கப்பட்டது. எனவே, 'இறைவன் ஒப்புயர்வற்ற தனிப் பொருள்' என்றதாயிற்று. 'பரம்பொருள், பரவஸ்து' என் றெல்லாம் கூறுதற்கும் இதுவே கருத்தென்க பரம்-மேன்மை. " பதி பரமே " § என்பது சிவப்பிரகாசம்.

---

* 90.

§ 13. இவ்விரு குறள்களிலும், "எங்கள் பிரான்" என்றத ளுல், 'எங்களுக்குவேறுகடவுள், பிறருக்குவேறுகடவுள்' எனக் கடவுளர் பலர் உளர் எனக் கூறியதன்று; 'கம்பராமன், கம்ப சீதை இத்தகையோர், வால்மீகி ராமன், வால்மீகி சீதை இத்தன்மையர்' எனின், இராமனும், சீதையும் இவ்விருவர் உளர் என்பது கருத்தன்று; 'இராமர், சீதை என்பவரது இயல்புகளைக் கம்பர் இப்படிக் கூறினர், வால்மீகியார் அப்படிக் கூறினர்' என்பதே கருத்து. அதுபோலவே, " எங்கள் கடவுள் இத்தன்மையன் " என்ருல், சைவசித்தாந்தம் கடவுள் இயல்பை இப்படிக் கூறுகின்றது. பிற பிற சமயங்கள் பிற பிறவாறு கூறுகின்றன என்பதே கருத்தாம். பிறவிடத்தும் இவ்வாறேயாம்.

நான்காவது குறள்,

4. " ஆக்கி எவையும் அளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல் "

என வரும்.

இதன்பொருள்: அவன் - அத்தன்மையனுகிய இறைவன் ; எவையும்-எல்லாப் பொருள்களையும் ; ஆக்கி-படைத்து ; அளித்து – காத்து ; ஆசுடன் அடங்கப் போக்கும் – மலத்தோடு ஒருசேரத் துடைப்பான் ; (அதனுல்) அவன் போகாப் புகல்- அவனே உயிர்கட்கு நீங்காத புகலிடம்.

விளக்கம்: "எவையும்" என்பது இடைநிலை விளக்கு. எல்லாப் பொருள்களுமாவன, 'அருவம், உருவம், அருவுருவம்' என்னும் மூவகை நிலையினவாய்ப் பலதிறப்படுவன. அருவம், கண் முதலிய பொறிகளுள் ஒன்றற்கும் புலனுகாது கருத்திற்கு மட்டும் புலனுவன. அவை பரமாணுக்கள், அவை போல்வனவாகிய சில சிற்றுடம்புகள், ஆகாயம், மனம், காலம் முதலியவை. உருவம், கண் முதலிய பொறிகட்குப் புலனுவன. அவை நிலம், நீர், மக்களும அவர்க்குக் கீழ்ப்பட்டனவும் ஆகிய உயிர்க்குரிய உடம்புகள் முதலியவை. அருவுருவம், கண் முதலிய பொறிகட்கு ஒருகாற் புலனுகியும், ஒருகாற் புலனுகாதும் நிற்பன்வ. அவை நெருப்பு, காற்று முதலியவை. 'நிலாவும் அருவுருவப் பொருள்' என்பது பண்டைய கொள்கை. இம்முத்திறப் பொருள்களும் வேறெரு வகையால் நான்காகக் கூறப்படும். அவை, 'தனு, கரணம், புவனம், போகம்' என்பன. தனு - உடம்பு. கரணம் - மனம் முதலிய உட்கருவிகள். புவனம் - நிலைக்களம். போகம் - நுகரப்படும் பொருள். இவற்றை முறையே, 'உடல், உளம், உலகம், உறுபொருள்' எனக் கூறலாம். இவை அனைத்தும் சடப் பொருள்களே (அறிவில்லாத பொருள்களே). சடப்பொருள் அனைத்தும் மாயையின் காரியங்களாம். காரியம் - செயப்படு பொருள். எனவே, இச்செயப்படு பொருள்களை இறைவன் செய்வோனுய் நின்று ஆக்கி, காத்து, அழிப்பன் என்க. எனவே, இறைவன் உயிர்களின் பொருட்டுப் 'படைத்தல், காத்தல், அழித்தல்' என்னும் முத்தொழில்களைச் செய்வன் என்பது இனிது விளங்கிற்று.

இனி, 'போக்கும்' என வாளா கூருது, 'ஆசுடன் அடங்கப் போக்கும்" என்றதனுல், 'உயிர்கள் இயல்பாகவே ஆசு (மாசு - அழுக்கு) உடையனவாய் உள்ளன' என்பதும், 'அவ்வாசினைத் தேய்த்துக் கழுவுதற் பொருட்டே இறைவன் மேற்குறித்த 'உடல், உளம், உலகம், உறுபொருள்' என்பவற்றைப் படைத்துக் காத்து அழிக்கின்ருன்' என்பதும், 'அவ் ஆசு தேய்வுற்று மெலிந்த காலத்தில் இயல்பாய் உள்ள அதனேடு தான் படைத்துக் காத்த உடல் முதலியவற்றையும் ஒருசேரப் போக்கி உயிரைத் தூயதாக்குவன்' என்பதும் போந்தன. உயிர்கள் இறைவனை அடைதற்குத் தடையாய் நின்றது ஆசேயாதலின், 'அது நீங்கித் தூய்தான உயிர் இறைவனை அடையும்' என்பதும், 'ஆசு என்றும் துன்பமேயாதலின், அதுநீங்கி இறைவனை அடைந்த உயிர் இடையரு இன்பத்தில் திளைக்கும் என்பதும் பெறப்படும்.

உயிர்கள் ஆசுற்று நின்றநிலை, 'பெத்தம்' என்றும், அதனின் நீங்கி இறைவனை அடையும் நிலை 'முத்தி' என்றும் சொல்லப்படும். 'பெத்தம், பெந்தம், பந்தம், கட்டு' என்பன ஒரு பொருட் சொற்கள். 'முக்தி, மோட்சம், வீடு' என்பன ஒருபொருட் சொற்கள்.

உயிர்களுக்கு இயற்கையாய் உள்ள ஆசே 'ஆணவ மலம்' எனப்படுவது. இதுவே ஏனைய எல்லாக் குற்றங்கட்கும் காரணமாதலின் 'மூல மலம்' என்றும், உயிர் என்று உண்டோ அன்றே இம்மலம் அதற்கு உடனுய் இருத்தலின், 'சகச மலம்' என்றும் சொல்லப்படும். உயிர்கட்கு இதனை நீக்கி இறைவன் தன்னை அடையச் செய்தலே உண்மையாக அருள்புரிதல். அதனுல் அவன் உயிர்கட்கு வீடுபேற்றைத் தரும் செயலே 'அருளல்' எனப்படுகின்றது. அதற்கு முன்னர்ச் செய்யும் செயல்களில் எல்லாம் உயிர்கள் இறைவனை அறியமாட்டாது உலகத்தையே அறிந்து நிற்றலால் அவையெல்லாம் 'மறைத்தல்' என்றே சொல்லப்படும். எனவே, இறைவன் உயிர்களுக்குப் பெத்தமாகச் செய்யும் தொழில்கள் மறைத்தலும். முத்தியாகச் செய்யும் தொழில் அருளலும் ஆகின்றன. படைத்தலும், காத்தலும், அழித்தலும் ஆகிய தொழில்கள் சடப் பொருளாகிய உலகத்தின் மேல் நிகழ்வன. மறைத்தலும் அருளலுமாகிய தொழில்கள் சித்தாகிய (அறிவுடைப் பொருள்களாகிய) உயிர்கள்மேல்

நிகழ்வன. இவ்வேறுபாடுகள் இனிது விளங்க இறைவன் செய்யுந்தொழில்கள் பலவற்றையும் விரிவாக எண்ணினால், 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' என ஐந்தாகும். அவ்வேறுபாடு கருதாது தொகுத்துக் கூறும் வழி, மறைத்தல் காத்தல் தொழிலிலும், அருளல் அழித்தல் தொழிலிலும் அடங்க, இறைவன் செய்யும் தொழில் மூன்றாகியே நிற்கும். இக்கருத்துத் தோன்றவே இங்கு அருளலை அழித்தலுள் அடக்கி, "ஆசுடன் அடங்கப் போக்கும்" என்றார். மேல், "ஒப்பின்மையான்" என்றதனால், இவ்வாறு பெத்தம், முத்தி இரண்டிலும் உயிர்கட்கு அவற்றின் நிலையறிந்து அருள்புரிவார் பிறர் இன்மையால், 'அவற்றிற்கு என்றும் நீங்காத புகலிடம் அவனேயன்றிப் பிறர் இல்லை' என்றார். எனவே, 'இறைவனே உயிர்கட்கு என்றும் கதியாகலின், அவனை அறிந்து அடைதலே உயிர்கள் கதியடைதலாகும்' என்பது பெறப்படுகின்றது. அதனால் சைவ சித்தாந்தம் இறைவனை அடைதல் ஒன்றே மேலான கதி-'பரமுத்தி' என்றும், 'பிற கதிகள் எல்லாம் மேலான கதி அல்ல' என்றும் கூறுகின்றது.

'இதனால், 'இறைவன் செய்யும் தொழில் தொகையால் மூன்றும். விரியால் ஐந்துமாம்' என்பதும், 'அவனை அடைதல் ஒன்றே உயிர்கள், அடையத்தக்க பேறுகளுள் முடிந்த பேறு' என்பதும் கூறப்பட்டன.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Amirthagadeswaraswami Devasthanam, Tirucadaiyur.

I had the occassion to visit this great and historic temple today and have the Dharsan of Goddess Abhirami and other deities. It is highly appreciable to note that the temple premises are very neatly maintained, which is generally the special feature of the temples maintained by the Dharmapuram Adhinam.

(Sd.) x x x
R. D O. Mayuram (I/c.)
D. S. O. Thanjavur.

12—8—70.

## தமிழ்நாடு தெய்விகப் பேரவை சார்பில் அளிக்கப்பெற்ற பாராட்டு விழாவில்

# மாண்புமிகு. முதலமைச்சர் அவர்கள் ஆற்றிய உரை

இங்கே பேசிய ஆதீனகர்த்தர்கள் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வருவதற்கு முன் அந்தக் கட்சியைப் பற்றி தாங்கள் கொண்டிருந்த கருத்துக்களும் ஆட்சிக்குவந்த பின்னர் அந்தக் கட்சியைபற்றித் தாங்கள் கொண்டிருக்கும் கருத்துகளுக்கும் உள்ள வேறுபாடுகளை எல்லாம் எடுத்துச் சொன்ஞர்கள். முன்னேற்றக் கழகம் தனது கொள்கையை மாற்றிக் கொண்டதா ? அல்லது ஆதீன கர்த்தர்கள் முன்னேற்றக் கழகத்தை பற்றிய தங்கள் கொள்கைகளை மாற்றிக் கொண்டார்களா என்பது பிரச்சனை. முன்னேற்றக்கழகத்தை துவக்கிய அறிஞர் அண்ணு அவர்கள் திராவிடர் கழகத்தில் இருந்த காலத்தில் தீட்டிய 'வேலைக்காரி' என்ற திரைப்படத்தில் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற கருத்தை அந்தத் திரைப்படம் முழுதும் உணர்த்தியிருந்தார். படம் முடியும் நேரத்தில் வணக்கம் என்று இப்போது காட்டுவதுபோல், அல்லது பழங்காலத்தில் சுபம் என்று காட்டுவதுபோல் அந்தத் திரைப்படத்தில் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற எழுத்துத் தொகுப்பைத்தான் காட்டினுர்கள். பராசக்தி என்ற படம் எழுதிய கருணுநிதி கோவிலுக்கு செல்லலாமா ? என்று பரபரப்பைக் கிளட்டுகிருர்கள் சிலர். அந்தப் படத்தில் வரும் ஒருகாட்சியில்கூடத் தெளிவாகக் கூறியிருக்கிறேன். கோயில் கூடாது என்பது என்கொள்கையல்ல. கோயில் சில கொடியவர்களின் கூடாரமாக இருக்கக்கூடாது என்பதுதான் என் கொள்கை என்று எழுதிய அன்றிலிருந்து இன்றுவரை கோயில் சமயவாதிகள் பற்றிய எங்கள் கொள்கையிலிருந்து அணுவளவும் பிறழவில்லை.

### என்னதான் செய்வது

நாங்கள் கோவிலுக்குப் போகும்போது இதுபோன்ற விழாக்களில் கலந்துகொள்ள அழைப்புக்கள் தந்து அதை

ஏற்றுக்கொள்ளும்போது நாட்டில் உள்ளோர் ஏதாவது கூறு வார்கள். எதைப்பற்றியும் குறைகூறுவார்கள். இதற்கு ஒரு உதாரணம். முன்பு அறநிலைய அமைச்சராக இருந்த நெடுஞ் செழியன் தில்லை கோவிலுக்குச் சென்றார். அவரிடம் திருநீறு அளிக்கப்பட்டது. அவர் திருநீறு அணியும் பழக்கம் இல்லாத வர் ஆகையால் பக்கத்தில் உள்ள செயலாளரிடம் தந்தார். ஆனால் பத்திரிகைகளில் அமைச்சர் விபூதியை வீசி எறிந் தார் அப்படி எறியலாமா? என்று எழுதினார்கள்.

அந்தப் பத்திரிகைதான்.........சில நாட்களுக்குமுன் முதல் அமைச்சர் திருக்குவளையில் அங்காளம்மன் கோயிலுக்குச் சென்றார். இவர்கள் எல்லாம் சுயமரியாதை இயக்க வீரர் களா? என்னிடம் அங்கு விபூதிதந்தார்கள். கொடுத்தவர்களை மதித்து வாங்கினேன். பக்கத்தில் இருந்தவரிடம் கொடுத் தேன். நெடுஞ்செழியன் இவ்விதம் செய்தபோது கோவி லுக்கு இழுக்கு என்றார்கள். நான் சென்றபோது கருணாநிதி கோவிலுக்கு செல்லலாமா என்றார்கள். கோவிலுக்குச் சென்ற தையும் அங்கு நடந்ததையும் தங்கள் விருப்பம்போல் திரித்துக் கூறுபவர்கள் இருக்கிறார்கள் என்பதற்காக இதைக்கூறினேன். தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள் கடவுள் நம்பிக்கையற்றவர்கள் என்று நாங்கள் சொல்லவில்லை. தி. மு. கழகம் கடவுள் நம்மை ஏற்றுக்கொள்கிற பாதையில் செல்ல வேண்டு மென்று வற்புறுத்துகிறது.

நேரு, தன்னைப் பச்சை நாஸ்தீகர் என்று கூறிக்கொண் டார். அவர் மறைந்தபோது தமது உயிலில்கூட நாஸ்தீகர் என்று கருதும்படி கருத்துக்களை கூறியிருந்தார். ஆயினும் அவர் ஆட்சி நடத்தியபோது அவர் எந்த மதத்தையும் புண் படுத்தும்படி நடந்துகொண்டது இல்லை. நாங்கள் எங்களை நாஸ்தீகர் என்று கூறிக்கொண்டது இல்லை. அதைபோலவே எந்த மதத்தையும் புண்படுத்தக்கூடாது என்ற முறையில் ஆட்சி நடத்தி வருகிறோம். இங்கு வெளியிடப்பட்ட பேரவை நூலில் ஒருகருத்து வெளியிடப்பட்டிருக்கிறது.

பூமிக்குள்ளே நீர் இருக்கிறது. என்றாலும் கிணற்றை வெட்டினால்தான் நீர் நமக்குப் பயன்படும். அதுபோல் ஆண்ட வன் எங்கும் இருக்கின்றான். ஆனால் ஆலயம் அமைத்தால் தான் கடவுளை நாம் காணமுடிகிறது என்பது அந்தக்கருத்து.

ஆண்டவன் இருக்கவேண்டிய இடம் ஒன்று தேவைதான். அதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அந்த இடம் ஆலயமா இல்லையா என்பதில்தான் எனக்கும் பிறருக்கும் வேறுபாடு. கோவில் சிலை என்பது எல்லாம் பாமரர்கள் புரிந்து கொள்வதற்காக என்று அவர்கள் கூறக்கூடும். அந்தச் சர்ச்சையில் இங்கு நான் இறங்கவில்லை. முன்பு நான் "ஏரோட்டும் மக்கள் எல்லாம் ஏங்கித் தவிக்கையிலே தேரோட்டம் ஏன் உனக்கு தியாகராஜா" என்று கேட்டேன். இப்படிக் கேட்ட கருணாநிதி தேரை ஓட்டலாமா! என்று கேட்கிறார்கள். நான் கேட்டது தெய்வத்தைதான்; அன்றைய தினம் ஆட்சி புரிந்தவர்களைக் கேட்கவில்லை. பக்தர்கள்கூட இப்படிக் கேட்பதுண்டு. நான் இவ்வாறு கேட்டதற்குப்பிறகு தேர் ஓடவில்லை. நான் எழுப்பிய குரலுக்கு செவி சாய்த்து தேரோட்டம் தேவையில்லை என்று தியாகராஜர் கூறிவிட்டார். இப்போது இருபதுவருடம் கழித்து ஆட்சிக்கு வந்த பிறகு ஏரோட்டும் மக்களுக்கு நன்மைசெய்தபிறகு நிலப் பட்டாக்கள் பல வழங்கியபிறகு தியாகராஜன் தேரோட்டம் நடத்தியுள்ளார். நாங்கள் கடவுள் ஆலயம் ஆகியவற்றை கலைக் கண்கொண்டு பார்க்கிறோம். கடவுள் ஏழைகளின் நெஞ்சங்களில்தான் இருக்கிறார் என்பதை நம்புகிறவன் நான். இவ்வாறு முதல்வர் கருணாநிதி கூறினார்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswam Devasthanam, Vaithiswarankoil.

It is highly ennobling and makes one reach high realms of ecstasy when worshipping in this great temple which is truely a jewel that adorns our country. Much is due to the devotion and deligation of His Holiness Subramanya Desika Paramacharya Sannidhanam. During his rule the temple is bestowing grace and a full measure of blessings. All power and strength to him and associates,

(Sd.) Alagappa
of
United Nations.

# காலத்தை வென்ற கவிமன்னன் பாரதி

வித்துவான். திரு. இரா. செல்வக்கணபதி

காலத்தை வென்ற கவிமன்னன் பாரதி
ஞாலத்தை வென்ற நலம்பாடு என்றார்கள் !

பொங்கு தமிழ்உணர்வில் பூத்துநின்ற நன்மலரை
தங்கு தடையின்றித் தமிழாலே பாடென்றார் !

விண்ணைச் சுருட்டியொரு வேர்க்கடலைத் தோலுக்குள்
கண்ணிமைக்கும் நேரத்தில் கரந்திடுதல் ஒல்லுவதோ ?

புல்லெடுத்துச் சிங்கத்தின் பொல்லாத பாய்ச்சலினை
வெல்லுவது கூடுமென விரித்துரைக்கு மூடருண்டோ ?

நல்லுணர்வே இல்லாதான் ஞாலத்தின் மேன்நிலையில்
வெல்லும் நெறிவகுத்து வென்றிடுதல் கூடுவதோ ?

காலத்தை வென்றுவிட்ட கவிமன்னன் பாரதியின்
கோலத்தைப் பாடுதற்குக் குளிர்தமிழில் வார்த்தையுண்டோ ?

போதிமரப் புத்தன் போய்விட்டான் என்றிருந்தோம்
பாதிவழி போனஅவன் பாரதியாய்த் திரும்பிவந்தான்

தெள்ளுதமிழ் வள்ளுவனார் திரும்பவில்லை என்றிருந்தோம்
உள்ளுணர்வில் பாரதியின் உருவத்தில் வந்திருந்தான்

வீரங்கள் செத்ததென வெம்பிவெம்பி அழுதிருந்தோம்
சாரங்கள் எனத்தமிழின் சாரதியாய் வந்திருந்தான் !

பொங்குதமிழ் புதுநெறிகள் புதுக்குதற்கு யாரென்றோம்
அங்கெங்கே தேடுகிறீர் ! அமரகவி நின்றிருந்தான் !

பைந்தமிழிற் சொல்லெடுத்தான்; பழந்தமிழை மாற்றிவிட்டான்
மைந்தர்களே புறப்படுங்கள் மாற்றானை வென்றிடுவோம் !

காட்டாற்று வெள்ளமென கரைபுரண்ட வீரத்தில்
பாட்டாற்றுப் புதுநெறிகள் படைத்தவனே அமரகவி

நாட்டுப் பாடல்களின் நாதங்கள் கூட்டியவன்
கூட்டுப் பறவைகளை கொதித்தெழவே செய்துவிட்டான்!

தெய்வத் திருப்பாட்டின் திறத்தாலே வையகத்தில்
உய்யும் பெருநெறிகள் ஓதியவன் ஓங்கிவிட்டான்!

ஆயிரங்கள் பாடிடினும் அவையெல்லாம் இந்நாட்டில்
கோயில் விளக்காகக் கொழுந்துவிடும் என்பதில்லை!

பாடும் குயிலையவன் பாடவைத்த பேரழகும்,
நாடும் புதியநெறி நலந்திகழும் பாரதத்தில்

அன்னைப் பாஞ்சாலி அழுதரற்றி அன்றுரைத்த
முன்னைச் சபதத்தில் முகிழ்த்திட்ட புத்தழகும்

கண்ணன் ஒருவனையே வண்ணமுற வேருக்கி
எண்ணம் மலர்த்திட்ட எழிலமுதப் பாட்டழகும்

எங்கள் தமிழ்மொழியில் இருக்கின்ற காலம்வரை
பொங்கும் அமரகவி புகழ்வானில் நின்றிருப்பான்!

முத்தமிழில் அவன்வடித்த மூன்று கவிதைகளும்
இத்தரையில் வாழும்வரை எங்கள் தமிழிருக்கும்!

---


## "ஞானசம்பந்தம்"

"ஞானசப்பந்தம்" திங்களிதழ் 28 ஆண்டுகளாகச் சைவமும் தமிழும் பரப்பிவருவது உலகம் அறிந்தது. இது திருக்கயிலாய பரமபரைத் தருமையாதீனத்திலிருந்து வெளிவருவது. சமயப் பொருள், இலக்கணம், இலக்கியம் முதலியவற்றுடன் தெளிவான கட்டுரைகளை வெளியிட்டுவருவது.

ஆண்டுச் சந்தா :- உள்நாடு ரூ. 3—00 வெளிநாடு ரூ. 4—00

செயலாளர் : "ஞானசம்பந்தம்" காரியாலயம், தருமையாதீனம், மாயூரம் அஞ்சல், தஞ்சை மாவட்டம்.



# செய்திகள்



## தருமையாதீனத் திருமடத்திற்கு மைசூர் மாமன்னர் வருகை

மைசூர் மாமன்னர் மாண்புமிகு செயசாமராச வாடியார் அவர்கள் தம் அரசகுடும்பத்தார் புடைசூழ ஆகஸ்டுத்திங்கள் இருபத்தேழாம்நாள் தருமையாதீனத் திருமடத்திற்கு வருகை புரிந்தார்கள். உரிய மரியாதைகளோடு வரவேற்கப்பெற்ற மாமன்னர் தருமையில் கோயில் கொண்டு அருள்வழங்கும் பதினெண் திருக்கரத்துக் கொற்றவைப் பிராட்டியை வழிபட்டார்கள். பின்னர், தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களைத் தரிசித்தார்கள். மகாசந்நிதானத்தில் மன்னர்க்குப் பொன்னாடை போர்த்தி மகர கண்டிகை வழங்கியருளி ஆசீர்வதித்தார்கள்.

பெருமகிழ்வுற்ற மாமன்னர் இந்நாள்வரை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தைத் தருமையில் வந்து தரிசிக்க இயலாமைக்கு வருந்தி. குருவாரத்தில் குருமூர்த்திகளைககண்டு ஆசி பெறக் கிடைத்த நல்வாய்ப்புக்கு மகிழ்ந்து தமது ஆழ்ந்த நன்றியை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்திற்குத் தெரிவித்துக்கொண்டார்கள்.

தருமை வழிபாட்டிற்கு முன்னர் மைசூர் மாமன்னர் ஆதீனத் திருக்கோயில்களுள் ஒன்றான வள்ளலார்கோயில் சென்று மேதா தட்சிணாமூர்த்தியை வழிபட்டார்கள். அடுத்து மாமன்னரும் சுற்றத்தாரும் புள்ளிருக்குவேளூர்க்கும், திருநள்ளாற்றிற்கும் சென்று வழிபாடு நிகழ்த்தினர்.

தருமை வருகையின்போது மாமன்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களைத் தம் மைசூர் அரண்மனைக்கு எழுந்தருள வேண்டி விண்ணப்பித்துக்கொண்டார்கள்.

தருமையாதீனத்தோடு மைசூர் மன்னர்கள், ஆதீன அடியவர் சம்பந்தசரணாலயர் காலமுதலாக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.

# தமிழ்நாடு தெய்விகப் பேரவையில் வெளிநாடு சென்று திரும்பிய தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களுக்குப் பாராட்டு

வெளிநாடு சென்று தமிழ் பரப்பித் திரும்பிய தமிழ்நாடு முதலமைச்சர் மாண்புமிகு. கலைஞர். மு. கருணாநிதி அவர்களுக்கு தமிழ்நாடு தெய்விகப் பேரவை சார்பில், பாராட்டு விழா 19-8-70 அன்று மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீஸ்வரர் கற்பகாம்பாள் கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது. அன்று திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுச் சிறப்பு மலர் வெளியீட்டு விழாவும் நடைபெற்றது.

பாராட்டு விழாவிற்குத் தெய்விகப் பேரவைத் தலைவர் திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் (குன்றக்குடி அடிகளார் M. L. C.) அவர்களும், தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களும், காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் எழுந்தருளியிருந்தார்கள். திருவண்ணாமலை ஈசான மடத்தின் தலைவர், கோவை பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடத்தின் தலைவர் ஆகியோரும் வருகைதந்தனர்.

தெய்விகப் பேரவைத் தலைவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், விழாவிற்கு எழுந்தருளிய ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானங்களையும், திருமடத்துத் தலைவர்களையும், தமிழ்நாடு முதல் அமைச்சர் முதலானவர்களையும் வரவேற்று வரவேற்புரை நிகழ்த்தினார்கள். இந்து சமய அறநிலைய ஆணையர் திரு. K. S. நரசிம்மன் B. A, B. L., I. A S. அவர்கள் முதலமைச்சர் அவர்களுக்கு வரவேற்புரை வாசித்தளித்தார்கள்.

சிதம்பரம் பொது தீக்ஷிதர்கள் முதலமைச்சர் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்து, மலர்மாலை அணிவித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானங்களுக்கும், திருமடத்துத் தலைவர்களுக்கும் மலர் மாலை அணிவித்துச் சிறப்பித்தார்கள்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் முதலமைச்சர் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்து ஆசியருளினார்கள். தமது ஆசியுரையில்:— சந்நியாசியும் அரசும் தன்மையில் ஒன்று. சந்நியாசிக்குக் கட்சி கிடையாது. அதுபோன்றதே அரசு. கட்சி கடந்து ஆள்வது அரசு. சமயத் தலைவர்கள் முதலமைச்சரைப் பாராட்டுவது முதல்வர் என்ற காரணத்திற்காக மட்டுமல்ல. முகஸ்துதியாகவும் நாங்கள்

அவரைப் பாராட்டவில்லை. கூரியமதி உடையவர் அவர். சிறந்த உள்ளம் கொண்டவர். அவரது சிறந்த பணிக்காகத் தமிழரைத் தமிழர் பாராட்டுவது பண்பு. முதலமைச்சர் அவர்கள் வெளி நாடு சென்றபோது கோயில், கலைகளுக்கு நிலைக்களமாக விளங்குகிறது கங்கைகொண்டசோழபுரம் திருக்கோயில் கலைகளுக்கு இருப்பிடம். அதைப் பாதுகாக்கவேண்டும் என்று கூறி கங்கைகொண்டசோழபுரத் திருக்கோயில் திருப்பணிக்கு உலக ஸ்தாபனத்தனிடம் நிதியுதவி கேட்டது அவரது உள்ளத்தைக் காட்டுகிறது. மேலும் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்தால் திருக்கோயில்கள், சமய ஸ்தாபனங்கள் இவற்றின் நிலைமையில் மாறுதல்கள் ஏற்படுமோ என்றெல்லாம் பலரும் ஐயப்பட்டுக்கொண்டிருந்தனர். ஆனால் ஆட்சிக்கு வந்ததும் சமய ஸ்தாபனங்கள், திருக்கோயில்கள் முதலியன நன்கு பரிபாலிக்கப்படல் வேண்டும் என்று அறிவித்து, அவை நன்முறையில் செயல்பட உதவுகிறார்கள் வைத்தீஸ்வரன்கோயில் மகாகும்பாபிஷேக காலத்தில் மகாகும்பாபிஷேகம் நன்முறையில் நிகழ, வேண்டிய உதவிகளைச் செய்துதருமாறு ஆட்சியிலுள்ள சகல துறையினர்க்கும் உத்தரவிட்டு அதன்படி நிகழ்த்தித் தந்தது பாராட்டுதற்குரியது என்று குறிப்பிட்டார்கள்.

திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுச்சிறப்புமலரை அமைச்சர் மாண்புமிகு K. V. சுப்பையா அவர்கள் வெளியிட்டார்கள்.

## தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் தலதரிசனம்

### வடதிருமுல்லைவாயில் வடபழனித் தரிசனம் :

தமிழ்நாடு தெய்வீகப் பேரவைக் கூட்டத்திற்கு எழுந்தருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் வட திருமுல்லைவாயில் ஸ்ரீமுல்லைவனநாதப் பெருமான் திருக்கோயிலுக்கு எழுந்தருளி வழிபட்டார்கள். அங்குப் பெருமானுக்கு திருமுறை அருச்சனை அஷ்டோத்திரமாகச் செய்விக்கப்பட்டது. "பொன்னும் மெய்ப்பொருளும்" என்று தொடங்கும் வட திருமுல்லைவாயில் பதிகத்தைப் பதினோரு முறை ஓதுவாமூர்த்திகளை ஓதச்செய்து பதினோருமுறை தீபாராதனைகள் செய்வித்து வழிபாடாற்றினார்கள் சுவாமி அம்பாளுக்குப்பரிவட்டம் படவை முதலியன வழங்கி சார்த்தச்செய்து வழிபட்டு மகிழ்ந்தார்கள். வடபழனியில் எழுந்தருளி அன்பர்களுக்கு அருள்வழங்கும்

ஸ்ரீ தண்டாயுதபாணிப் பெருமானையும் வழிபடத் திருவுளங் கொண்டு வடபழநிக்குச் சென்று வழிபாடாற்றினார்கள்.

மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீஸ்வரர் திருக்கோயிலுக்குச் சென்று ஸ்ரீ கபாலீஸ்வரரையும் ஸ்ரீ கற்பகாம்பாளையும் வழிபட்டு மகிழ்ந்தார்கள்.

### திருவானைக்கா :

திருவானைக்கா ஸ்ரீ ஜம்புகேஸ்வரசுவாமி தேவஸ்தானத்தில் அண்மைக்காலத்தில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடைபெற்றதை அனைவரும் அறிவர். திருவானைக்கா மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறப்புப்பெற்றது. 24—8—70 இல் நிகழ்ந்த மண்டலாபிஷேக தரிசனத்திற்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளினார்கள். திருப்பணிக் குழுத்தலைவர் திரு. T M நாராயணசாமிப்பிள்ளை, திருக்குறள் வேள் திரு. G. வரதராசப்பிள்ளை, B. A, இந்துசமய அறநிலைய ஆணையர் திரு. K. S. நரசிம்மன் B. A., B. L. I. A. S. அறநிலைய துணை ஆணையர் திரு. பக்கிரிசங்கர், திருவானைக்காத் திருக்கோயில் அறங்காவலர்கள் முதலியோர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகா சந்நிதானம் அவர்களைப்பூர்ணகும்பமுதலிய கோயில் மரியாதைகளுடன் திருக்கோயிலுக்குள் அழைத்துச் சென்று எல்லாச் சந்நிதிகளிலும் தீபாராதனை முதலியன செய்வித்து தரிசனம் செய்து வைத்தார்கள். வழிபாட்டின்போது சுவாமிக்கும் அம்பாளுக்கும் பரிவட்டம் முதலியன வழங்கி சார்த்தச்செய்து வழிபட்டு மகிழ்ந்தார்கள். வழிபாடு முடிந்தபின்னர் திரு T. M. நாராயணசாமிப்பிள்ளை, திரு G. வரதராசப்பிள்ளை ஆகியோருக்குப் பொன்னாடை போர்த்து மலர்மாலை அணிவித்து திருப்பணிக் குழுவினரின் திருப்பணி முயற்சியையும் திருப்பணிகளையும் பாராட்டி ஆசியருளி தருமைக்கு மீண்டருளினார்கள்.

### திருவிடைமருதூரில் :

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கப் பெருமான் திருக்கோயிலில் நிகழ்ந்த மகாகும்பாபிஷேகத்தின்போது எழுந்தருளி தரிசித்தார்கள். 30—8—70 இல் நிகழ்ந்த மண்டலாபிஷேக நிறைவு நாளன்றும் திருவாவடுதுறை ஆதீனத்தின் அழைப்பிற்கிணங்க

தரிசனம் செய்யத் திருவுளங்கொண்டு, முதலில் திருவாவடுதுறை ஆதீனத்திற்கு எழுந்தருளி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களோடு அளவளாவி மகிழ்ந்தார்கள். பின்னர் திருவிடைமருதூர் திருக்கோயிலுக்கு எழுந்தருளினார்கள். திருக்கோயிலில், ஆலய நிர்வாகிகள் கோயில் மரியாதைகளோடு ஆலயத்திற்குள் அழைத்துச்சென்று ஒவ்வொரு சந்நிதிகளிலும் தீபாராதனை முதலியன செய்து வழிபாடு நிகழ்த்துவித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஸ்ரீ அம்பாளுக்கு பட்டாடை வழங்கி சார்த்தச்செய்து வழிபட்டு மகிழ்ந்தார்கள். பின்னர், மகாமண்டபத்தில் திருவீதியுலாவிற்காக அலங்காரம் செய்யப்பெற்றிருந்த பஞ்சமூர்த்திகளுக்கு மண்டபதீபாராதனை செய்வித்து எழுந்தருளச்செய்து வழிபாடு நிகழ்த்தி தருமைக்கு எழுந்தருளினார்கள்.



---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

I had the pleasure and honour of having Darshan of Lord Vaithinathasami and Lord Muthukkumarasami after more than ten years. We are happy to see that it is the cleanest and well maintained temple in Tamil-Nadu. The credit goes to the efficient administration under the direction of His Holiness Subramaniya Desikar Dharmapuram Pandara Sannadhi. We leave the temple with a wish to come back again and again.

(Sd) N. M. Kasi,

22–8–70. University of Paris,

PARIS.



# எதிர்காலம்

திரு. K. முத்துஜோதிடர்

(சாதாரணஹு புரட்டாசிமீ 1உ முதல் 31உ முடிய)

(17—9—70 முதல் 18—10—70 முடிய)

ஸ்ரீ சிவபெருமான் திருவருளால் சாதாரண வருஷம் புரட்டாசி மாதம் முதல் தேதி குருவாரம் 17—9—70 பஞ்சாங்க சுத்தியான சுபதினத்தில் காலை 4 நாழிகை 2 விநாடிக்கு சுபவேளையில் பிராதக் காலத்தில் லோகரக்ஷகரான ஸ்ரீசூரிய பகவான் கன்னியாராசிக்குப் பிரவேசம் செய்வதால் ஷை மாத மும் உலகில் தக்ஷிணபாரத பூமியிடங் காவேரி தீர்த்தத்தில் சஸ்யதான்ய விருத்திகள் எவ்வருஷத்தையும்விட அதிகமாய் முதல் போகம் விளைந்து விவசாயிகளுக்கும் தர்மிஷ்டர்களுக்கும் சந்தோஷம்தரும். விவசாய காரியங்களும் நன்குநடைபெறும். சென்ற மாதம் போலவே அடிக்கடி கண்டம் கண்டமாய் மழை தரும். சுபிக்ஷமாகும்.

1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். சஞ்சாரம் அதிகமாகும். வரவு செலவு சமமாகும். எதிர்பாராத படி ஈதிபாதைகளால் சிரமம் காட்டும். இல்லறவாழ்க்கையில் பலவிதமான மாறுதல்களும் உண்டாகும். தெய்வ பலத்தால் எல்லாம் நன்மையாகவேமுடியும். வியாழன் வெள்ளிசுபமாகும்.

2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத் தரும். ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் சேரும். படிப்பில் பரிசு கிடைக்கும். பந்து மித்திரர்களால் போற்றப்படுவார்கள். சனி ஞாயிறு சுபமாகும்.

3. மிதுனம் – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ – திருவாதிரை–புனர்பூசம் $\frac{3}{4}$

மிதுனராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அதிக செலவுகள் ஏற்படும். அடிக்கடி சஞ்சாரமும் மனதிற்குக் கவலையும் தரும். உழைப்பு அதிகமாகும். ஜீவனம் ஓங்கும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். விவசாய காரியங்கள் தடைப்படும். எல்லாக் காரியங்களும் நினைத்தபடி நடக்காமல் தவக்கம் உண்டாகும். புத்திராதிகளால் இடைஞ்சல்கள் அதிகம் ஏற்படும். குடும்பம் ஒற்றுமை குறையும். எல்லாவற்றையும் தெய்வபலம் இருப்பவர்கள் ஜெயிப்பார்கள். புதன் வியாழன் சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் $\frac{1}{4}$.

சிம்மராசி 9 பாதங்களும் சுபமான பலனையே தரும். நண்பர்களால் பெருமையும் இடம்மாறுதலும். தொழில் அபிவிருத்தியும், வம்சவிருத்தியும், இல்லறசுகமும் உண்டாகும். வெள்ளி சனி சுபமுண்டாகும்.

6. கன்னி – உத்திரம் $\frac{3}{4}$ – ஹஸ்தம் – சித்திரை $\frac{1}{2}$.

கன்னியாராசி 9 பாதங்களும் சுபத்தையே தரும். புதிதான காரியங்கள், விவசாய காரியங்கள் விருத்தியாகும். தூரதேசத்திலிருந்து வாழ்த்து, கீர்த்திப்பத்திரங்கள் வந்து சேரும். எதிர்பாராதபடி தெய்விகமான தர்மங்களால் செலவினங்கள் கூடுதலாகும். மத்தியகாலங்களில் கொஞ்சம் ஆரோக்யக் குறைவுகாட்டும். கொஞ்சம் நஷ்டமும் ஏற்படும். தெய்வீகத்தன்மை ஓங்கும். சாதிக்கமுடியாத காரியமெல்லாம் சுலபமாக சாதிக்க முடியும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

7, துலாம் – சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$

துலாராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத் தரும். தெய்வீகமான காரியங்கள் அதிகமாகும். சாதிக்கமுடியாத

தெல்லாம் சுலபமாக சாதிக்கமுடியும். கீர்த்திப்பத்திரம் கிடைக்கும். நஷ்டமான பொருள் வந்து சேரும். தொழில் ஓங்கும். எல்லாக் காரியங்களும் தெய்வபலத்தால் சாதிக்க முடியும். செவ்வாய், புதன் சுபமாகும்.

8. விருச்சிகம் – விசாகம் $\frac{1}{4}$ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அநேகமான மாறுதல்களுடன் தொழில் ஓங்கும். கட்டிட வேலைகளால் அதிகமான செலவுகள் ஏற்படும். வரவு செலவு சமமாகும். மேலோர் பெரியோர்களின் அன்பு கிடைக்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$.

தனுர்ராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தை உண்டு பண்ணும். இல்லற சுகம் அதிகமாகும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். தொழில் விருத்தியாகும். நண்பர்களின் உதவியால் சகலமும் சாதிக்க முடியும் ஆரோக்யம் தரும் சனி, ஞாயிறு சுபமாகும்.

10. மகரம்– உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$.

மகரராசி 9 பாதமும் மிச்சிரபலனைத்தரும். விவசாய காரியங்கள் தடைப்படும். வேலைக்கார ஜனங்களால் சிரமம் உண்டாகும். உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கு அலைச்சலும் உழைப்பும் அதிகமாகும். பெரியோர்களின் அன்பினால் சகலமும் சாத்தியமாகும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் – பூரட்டாதி $\frac{3}{4}$,

கும்பம் 9 பாதங்களும் பூர்ணமான சுபத்தைத்தரும். குடும்பம் ஓங்கும். ஜீவனம் விருத்தியடையும். துஷ்டர்களால் உண்டாகும் தீமைகள் நீங்கி சுபமுண்டாகும். தெய்வபலம் பிரகாசிக்கும், புதன், வியாழன் சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் பூர்ணமான சுபத்தைத்தரும். தெய்வபலம் ஓங்கும். வம்சம் விருத்தியாகும். மேலோர் பெரி

யோர்களின் அன்பு கிடைக்கும். ஆரோக்யம் உண்டாகும். ஜீவனம் ஓங்கும். உலக பிரசித்தி ஏற்படும். எல்லாம் சுப மாகவே நடக்கும். வெள்ளி, சனி சுபமாகும்.

குறிப்பு:— ஷை புரட்டாசியில் ராஜாமந்திரிகளான செவ் வாயும் சந்திரனும் பிரவேசகாலத்தில் ஒருவருக்கொருவர் சஷ்டாஷ்டக ராசியில் சஞ்சாரமும் மந்திரி சந்திரனுக்கு மீன ராசியில் பாபகர்த்ரியால் பாதிக்கப்பட்டுமிருப்பதால் உலகில் பிரஜைகளிடம் அமைதியும் சாந்தியும் உண்டாகி எங்கும் மூன்றுவித உத்பாதங்கள் ஏற்படாமலும் மாநுஷாத்புதங்கள் ஏற்படாமலும் ஆறுவிதமான ஈதிபாதைகள் வராமலும் இருக்க பக்தர்கள் சாதுக்கள் தார்மிஷ்டர்கள் இவர்களின் பிரார்த்னுபலத்தால் எவ்வித உபாதிகளும் உண்டாகாமல் கடவுள் காப்பாற்றவேணும். உலகில் புருஷ ஸ்திரீகளுக்கு யௌவனபலம் தனசமிருத்திபலம் ஸ்வயம் யஜமானபலம் அறிவீனபலம்நான்கும் ஒன்றுசேர்ந்து சாதுக்களைப் பாதித்தும் ஜீவன பலமில்லாமல் பண்ணியும் சிரமத்தைத் தருமாகையால் சகல பிரஜைகளும் நமக்கென்னவென்றிராமல் கடவுளிடம் பூர்ண நம்பிக்கையுடன் இருந்துகொண்டு உலக க்ஷேமத்தை பிரார்த்திப்பதும் சுபமாகும்.

---

# விசேஷ நாட்கள்

## 10—9—70 முதல் 11—10—70 முடிய

13—9—70 பிரதோஷம்.
20—9—70 வேளூர் கிருத்திகை.
21—9—70 திருநாளைப்போவார் நாயனார் திருநக்ஷத்திரம்.
27—9—70 பிரதோஷம்.
28—9—70 அருணந்தி சிவாசாரியார் திருநக்ஷத்திரம்.
30—9—70 மகாளயபக்ஷ அமாவாசை.
1—10—70 நவராத்திரி விழா ஆரம்பம்.
9—10—70 சரஸ்வதிபூசை, ஏனாதி நாயனார் திருநக்ஷத்திரம்.
10—10—70 விஜயதசமி.
11—10—70 நரசிங்கமுனையரைய நாயனார் திருநக்ஷத்திரம்.

## தரு...யாதீனத்தில் ஆவணிமூல விழா

ஆலவாய்ப்பெருமான் மணிவாசகருக்காக நரி...ப் பரியாக்கியும், பிட்டு வாணிச்சி வந்திக்காகப் பிட்டுக்கு மண் சுமந்தும் அருள் விளையாடல் நிகழ்த்திய திருநாள் ஆவணிமூலத் திருநாள். இத்திருநாள் தருமையாதீனத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. ஆவணிமூலத் திருநாட்களில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தி வழிபட்டார்கள். 10—9—'70 வியாழக் கிழமை சிறப்பு வழிபாடு நடைபெற்றது. அன்பர்கள் வந்து வழிபட்டு பிரசாதம் பெற்று உய்ந்தனர். உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் என்ற சித்தாந்த சாத்திர முதற்படி நூல்கள் விழா மலராக வெளியிடப்பெற்றது.

ஆவணிமூல விழாவையொட்டி 8, 9, 10—9—70 ஆகிய மூன்று நாட்களிலும் ஆதீனக் கல்வி நிலையங்களின் ஆண்டு விழா நடைபெற்றது. 8, 9—9—70 ஆகிய இரண்டு நாட்களிலும் வேத சிவாகம பாடசாலை, தேவாரப் பாடசாலை, ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி, உயர்பள்ளி ஆகிய கல்வி நிலையங்களின் ஆண்டு விழா நடைபெற்றது.

10—9—70 வியாழக்கிழமையன்று ஆதீனப் பல்கலைக் கல்லூரியின் ஆண்டு விழா நடைபெற்றது. விழா மாலை 7 மணியளவில் தொடங்கியது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வீற்றிருந்தார்கள். இந்நாள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் மோனத்தவம் பெருக்கும் நாள். திருமுறை ஓதிய பின்னர் வித்துவான். ஸ்ரீமத்.சோமசுந்தரத்தம்பிரான்சுவாமிகள் விழாவிற்கு வருகைபுரிந்த அனைவரையும் வரவேற்று, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களது அருளாசியைப் படித்தார்கள். பின்னர், ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியர் டாக்டர். திரு. ந. சஞ்சீவி M. A., Ph. D அவர்களுக்கு "செந்தமிழ் இலக்கியச் செம்மல்" என்னும் சிறப்புப் பட்டம் வழங்கி, பொன்னுடை போர்த்து ஆசியருளினார்கள். ஆதீனக் கல்வி நிலையங்களின் ஆண்டு அறிக்கைகளும் விழாவிற்குவந்த வாழ்த்துச்செய்திகளும் படிக்கப்பெற்றன. தமிழ்நாடு இந்துசமய அறநிலைய ஆணையர் திரு. K. S. நரசிம்மன் B. A., B. L., I. A. S. அவர்கள் ஆதீனக்கல்வி நிலைய மாணவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அருளிய பரிசுகளை வழங்கி, சிறப்புரையாற்றினார். பின்னர், "செந்தமிழ் இலக்கியச் செம்மல்" திரு. ந சஞ்சீவி அவர்கள் தமது மகிழ்வுரை ஆற்றியபின்னர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்துறைத் துணைப்பேராசிரியர், திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர், வித்துவான். திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள் செந்தமிழ் இலக்கியச் செம்மலைப் பாராட்டி, திருமுகப் பாசுரம் என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார்கள். ...சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் நன்றியுரை கூ...

தருமையாதீனத்துக்குச்சொந்தமான புள்ளிருக்குவேளூர்

## ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

# மகாகும்பாபிஷேக விழா மலர்

தென்னாட்டில் மிகச் சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குவது புள்ளிருக்குவேளூர். இறைவன், தீராநோய் தீர்த்தருள்கின்ற வைத்தியநாதனாக விளங்குகிறான். முருகன் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி என்ற திருப்பெயரொடு விளங்கிவருகின்றார். சமய குரவர் முதலிய அருளாளர்கள் பாடிப் பரவிய திருத்தலம். இத்தலத் திருக்கோயிலைத் தருமையாதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இராஜ கோபுரங்கள், விமானங்கள் முதலிய அனைத்தையும் புதுப்பித்து 2—7—69 அன்று ஜீரணோத்தாரண அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். கும்பாபிஷேக விழாவின் சிறப்பு மலர்இது. இம்மலர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களது வாழ்த்துரையுடனும், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் முதலியோர் வழங்கியருளிய வாழ்த்துச் செய்திகளுடனும் வெளிவருகிறது.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், திருமுறை, சாத்திரம், தோத்திரம், இலக்கியம், கலை, சமயம், வாழ்வியல், திருக்கோயில், மருத்துவம், கல்வெட்டு ஆகிய பல தலைப்புக்களில் அறிஞர்கள் பலர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இம்மலரை அணிசெய்கின்றன. டிம்மி 1 x 4 ஆர்ட் படங்கள் வெள்ளை கிளேஸ் காகிதங்கள். பக்கங்கள் 534.

**விலை ரூ. 14—00. பதிவஞ்சல் கட்டணம் ரூ. 4—00.**

கிடைக்குமிடம் :— டிரஷரர். ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், வைத்தீஸ்வரன்கோயில், தஞ்சைமாவட்டம், தமிழ்நாடு.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhina
at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—9—70.